


# குமாரன் ஆசான்

கே. எம். ஜார்ஜ்



இந்திய
இலக்கியச்
சிற்பிகள்

நவீன மலையாள முப்பெருங் கவிஞர்களுள் ஒருவர் குமாரன் ஆசான் (1874-1924). மற்ற இருவரும் வள்ளத்தோல் நாராயண மேனனும், உள்ளூர் பரமேசுவர அய்யரும் ஆவர். ஆசானின் வாழ்க்கைநெறியிலும் சரி, கொள்கைகளிலும் சரி, கீழ்நாட்டுத் தத்துவங்களும், மேல்நாட்டுச் சிந்தனைகளும் இணைந்த ஓர் அழகிய அபூர்வச் சேர்க்கையைக் காணலாம். ஒரு பெரும் கவிஞரான ஆசான் ஒரு சிறந்த நிர்வாகியும் கூட. பிற்பட்ட இனத்தவரான ஈழவர்களின் தலைவராக விளங்கி, ஸ்ரீ நாராயண குருஸ்வாமிகளின் முக்கிய சீடராக இருந்து, ஸ்ரீ நாராயண தர்ம பரிபாலன யோகம் என்ற அமைப்பை நிறுவி, பதினேழு ஆண்டுக் காலம் அதன் பொதுச் செயலாளராகப் பணியாற்றித் தமது பலவகைத் திறமைகளை வெளிப்படுத்தியவர் அவர். செயலிழந்த தாழ்த்தப்பட்டோர் தம் நிலை உணர்ந்து, உயர்வதற்குத் தாமே பாடுபட, அவர்களை உந்தினர் ஆசான். சனாதனத் தலைவர்களைப் பார்த்து "மாற்றுவீர் சட்டங்களை, இன்றேல் அவை உம்மை மாற்றிவிடும்" என்று முழங்கிய முழக்கம் தீர்க்க தரிசன வாக்காயிற்று.

இலக்கியத் துறையிலும் சமூகச் சீர்திருத்தத் துறையிலும் புரட்சியின் விதைகளைத் தூவியவர் ஆசான். கடந்த நாற்பதாண்டுகளில் அவரது தீர்க்க தரிசனத்தின் பெருமை புலப்பட்டபடி இருக்கிறது.

அவரது படைப்பாற்றல் உச்ச நிலையில் இருக்கும் போது, அவர் ஒரு நீர் விபத்தில் மறைந்து விட்டார். அப்போது அவருக்கு வயது ஐம்பத்தொன்றே.

அட்டை அமைப்பு: **சத்யஜித் ரே**
உருவப் படம்: **பி. ஸ்ரீதரன் நாயர்**

**விலை ரூ. 2·50**

இந்திய இலக்கியச் சிற்பிகள்

# குமாரன் ஆசான்

ஆசிரியர் :

கே. எம். ஜார்ஜ்

தமிழாக்கம் :

கே. சி. சங்கரநாராயணன்



சாகித்திய அக்காதெமி

புது தில்லி

# பொருளடக்கம்

' பிரரோதனம் ' நூலின் கையெழுத்துப் பிரதியின் முதல் பக்கம்.
ஏ. ஆர். ராஜராஜவர்மாவின் மரணத்தை அடுத்து 1918-ல்
குமாரன் ஆசான் அஞ்சலியாக இயற்றிய கவிதை இது.
(அத். 9) - தமது எழுத்தைக் கவிஞர் எப்படித் திருத்திச்
செப்பனிட்டார் என்பதை இந்தத் தாளிலிருந்து
அறியலாம்.

# 1. இளமையும் வறுமையும்

கி.பி. 1892ல் சுவாமி விவேகானந்தர் கேரள நாட்டிற்கு வந்திருந்தார். திரும்பிப் போகும் போது கேரளத்தை "ஜாதிக் கொடுமையால் சித்தக் கோளாறு அடைந்தவர்கள் நிறைந்த ஒரு பெரும் பைத்தியக்கார ஆஸ்பத்திரி" என்று விவரித்தார். உலகெங்கும் 'ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்' என்று நினைத்த அவர் மனத்தில், கேரளத்தில் அன்று நிலவியிருந்த தீண்டாமையும் அணுகாமையும், ஏமாற்றத்தையும் வெறுப்பையும் உண்டாக்கியிருக்க வேண்டும். அதனுல் அவர் கூறிய அச்சுடு சொற்கள் சாட்டையடியைப் போன்று சுரீரென்று தைத்தன. அன்று பாரதத்தின் பிற மாநிலங்களுக்கும் இக்கண்டனம் பொருந்துமாறு இருந்த போதிலும், கேரளத்தில் இருந்த அளவுக்கு எங்கும் அக்கொடுமைகள் இருக்கவில்லை.

கேரளத்தில் "ஈழவர்கள்" அல்லது "தீயர்கள்" என்று அழைக்கப்படும் ஜாதியினர் ஐந்து பேரில் ஒருவர் என்ற எண்ணிக்கையில் உள்ளனர். அவர்களுடைய பிற்போக்கு நிலை சென்ற நாற்பது ஐம்பது ஆண்டுகளாக விரைவில் மாறிக் கொண்டு வந்திருக்கிறது. ஆனுல் 1892ல் அவர்களின் நிலை மிகவும் இரக்கத்துக்கு உரியதாக இருந்தது. நமது சரித்திர நாயகர், குமாரன் ஆசான் அந்த வகுப்பினரைச் சேர்ந்தவர்.

காயிக்கரை என்னும் சிற்றூர், திருவனந்தபுரம் மாவட்டத்தில் அரபிக்கடலுக்கும் அஞ்சுதெங்கு என்று அழைக்கப்படும் காயல் நீர்ப்பரப்புக்கும் நடுவே உள்ள கிராமம். வெண்மணற்பரப்புக் கிடையே அடர்ந்து வளரும் தென்னந் தோப்புகளும் சோலைகளும் உள்ள அவ்வூர் குமாரன் ஆசான் பிறந்த இடம் என்பதனுல் புகழடைந்துள்ளது. மகாகவி குமாரன் ஆசான் பிறந்த ஊரைப் பார்க்கவும், அவர் நினைவாக அங்கு அமைக்கப்பட்டிருக்கும் மண்டபத்தைக் காணவும், அவர் பெயரில் ஆண்டு தோறும் அங்கு நடைபெறும் இலக்கிய விழாவிற் கலந்து கொள்ளவும், அளவற்ற கேரள மக்கள் அங்கே கூடுவதுண்டு.

குமாரன் ஆசான் கி.பி. 1873ம் ஆண்டு, ஏப்ரல் மாதம் 12ம் தேதி, (கொல்லம் ஆண்டு 1048, மே - மாதம், 2ம் தேதியன்று)

சித்திரா பௌர்ணமி நாளில் பிறந்தார். சோதிடர்கள் சித்திரா பௌர்ணமியன்று பிறப்பது நன்மைக்கு அறிகுறி என்பார்கள். ஆசானைப் பொறுத்த வரையில் இது சரியே. அவருடைய தந்தை நாராயணன், கயிறு, கொப்பரை முதலிய இனங்களில் வர்த்தகம் செய்து வந்தார். நாராயணனுக்கு இசையிலும், தமிழிலும், மலையாளத்திலும், பொதுக் காரியங்களிலும் ஈடுபாடு உண்டு. காயிக்கரையில் ஓர் ஆரம்பப்பள்ளி தொடங்குவதற்கு அவர் காரணமாக இருந்தார். தாயார் காளியம்மாளைக் 'கொச்சுப் பெண்ணு' என்றும் அழைப்பதுண்டு. 'தொம்மன் விளாகம்', என்ற வீட்டைச் சேர்ந்த அவ்வம்மையார் அசைவற்ற தெய்வ பக்தியும் இரக்கம் நிறைந்த நெஞ்சும் உடையவர்.

குமாரன் அவர்களுடைய இரண்டாவது குமாரர். அவரைத் தவிர அவர்களுக்கு மேலும் ஆறு ஆண் குழந்தைகளும் இரண்டு பெண்களும் பிறந்தார்கள். இரண்டு ஆண் குழந்தைகளும் ஒரு பெண் குழந்தையும் சிறு வயதிலேயே இறந்து போனார்கள். மூத்த மகனான கிருஷ்ணன் தகப்பனாருக்கு உதவியாக வியாபாரத்தையும் வீட்டுக் காரியங்களையும் கவனித்து வந்தான். தகப்பனாருக்குப் பிறகும் வீட்டுக்கும் பெரியவனாக எல்லாப் பொறுப்புகளையும் ஏற்று நடத்த வேண்டிய கடமை கிருஷ்ணனைச் சேர்ந்தது. குமாருவுக்கு இளையவனாகிய கொச்சு சங்கரன் வாழ்நாள் முழுவதும் பிரம்ம சரியம் மேற்கொண்டு ஆன்மீகத்துறையில் ஆழ்ந்தவனாக இருந்து விட்டான். கோவிந்தன், சேகரன் என்ற மற்ற இரு சகோதரர் களும் பள்ளியாசிரியர்களாகப் பணியாற்றினார்கள்.

அன்று குடிப் பள்ளிக்கூடங்கள் என்று அழைக்கப்பட்டவை வெறும் கீற்றுக் குடிசைகளே. அவற்றின் ஆசிரியருக்கு ஆசான் என்று பட்டப் பெயர். பத்திருபது பிள்ளைகளுக்கு எண்ணும் எழுத்தும் அறிவிப்பது தான் பாடம். அதற்கு மேல் நான்கு வகுப்புகள் வரை உள்ள ஆரம்பப் பள்ளிகளுக்குப் போகலாம். அங்கே தான் சிலேட்டும் பென்சிலும் காணமுடியும். குடிப் பள்ளிக்கூடத்தில் உட்காருவதற்குக்கென்றே பல தடுக்குகளும், எழுதுவதற்கு வெண் மணலும் மட்டும் இருக்கும். ஆசானுக்கு மட்டும் உட்காருவதற்கு ஒரு நாற்காலியும், பிரம்பு, எழுத்தாணி, வெற்றிலைப் பெட்டி முதலிய அரிய பொருள்களை வைப்பதற்கு ஒரு கள்ளிப் பெட்டியும் இருக்கலாம். ஆசான் சுவடியில் எழுதிக் காட்டும் எழுத்துக்களை மாணவர்கள் கைவிரலால் மணலில் எழுத வேண்டும், எல்லாம் வாய்ப்பாடமும் கைப்பாடமுந்தான். அனேகமாக ஏழைகள் எல்லோரும் இந்தப் பள்ளிக்கூடத் துடனேயே அறிவு வளர்ச்சிக்கு முற்றுப் புள்ளி வைத்து விடு வார்கள்.

குமாரனுக்கு ஏழு வயதாகும் போது குடிப்பள்ளிக்கூடத்தில் சேர்த்தார்கள். ஆசிரியர் துண்டத்தில் ஆசான் என்பவர் ஆயுர் வேதம், மந்திரவாதம், ஜோதிடம் முதலிய கலைகளில் தேர்ந்தவர். ஊக்கமும் முயற்சியும் உள்ள பிள்ளையாதலின் குமாரன் வெகு விரைவிலேயே அங்கே படிக்க வேண்டிய பாடங்களில் தேர்ச்சி பெற்றான். ஒரு வருடம் கழிந்தபின், மருத்துவரும், வடமொழி அறிஞருமான கொச்சுராமன் வைத்தியர் என்பவருடன் சேர்ந்து குமாரன் வடமொழி பயின்றான். அமரகோசம், ஸித்தரூபம், ஸ்ரீ ராமோதந்தம், கிருஷ்ணவிலாஸம், ரகுவம்சம் ஆகிய ஆரம்பப் பாடங்களையும் பிறகு சிறிது கடினமான 'மாக' காவியத்தையும் அவரிடம் கற்றான். வைத்தியருக்கு நோயாளிகள் அதிகரித்ததால் மாணாக்கனின் படிப்புக்கு இடைஞ்சலாக இருந்தது. அப்படி ஓர் ஆண்டு வீணாகப் போனபின் குமாரனின் தந்தையாரின் ஊக்கத்தினால் உருவான ஆரம்பப் பள்ளியில் சேர்ந்து மூன்று வருடங்கள் படிக்க முடிந்தது. குமாரனுக்குப் பதினான்கு வயது நிறைந்த போது ஆரம்பப் பள்ளிப் படிப்பு முற்றுப் பெற்றது. அதற்குப் பிறகு அதே பள்ளிக்கூடத்தில் ஒரு துணை ஆசிரியனாகச் சில மாதங்களுக்குப் பணியாற்றும் வாய்ப்பும் குமாரனுக்குக் கிடைத்தது. இதை அவனுடைய புத்திக் கூர்மைக்கும், அறிவின் நுட்பத்துக்கும் ஒரு சான்றாகக் கொள்ள லாம்.

பதினெட்டு வயது நிறைந்தால் தான் ஆசிரியனாக இருக்கலாம் என்று சட்டம் கூறியதனால் குமாரன் ஒரு பெரிய வியாபாரியிடம் கணக்குப் பிள்ளையாக வேலை பார்க்கத் தொடங்கினான். மேலும் படிக்கவேண்டும் என்ற ஆர்வம் இருந்த போதிலும், வேறுவழி யின்றித் தந்தையின் கட்டளைக்கிணங்க வேலையில் அமர்ந்து வீட்டுக்கு உதவியாக இருக்க நேர்ந்தது. ஒரு முறை தந்தையுடன் பிணங்கிப் பாட்டனாரின் வீட்டுக்குப் போய்விட்ட குமாரனைத் தாய் நல்ல வார்த்தைச் சொல்லி அழைத்து வந்தாள். கடைசியாகக் குமாரனின் முதலாளியே அவன் தகப்பனாரிடம் சொல்லி மேற் படிப்புத் தொடருவதற்கு ஏற்பாடு செய்தார், புதிதாக ஏற்படுத்தி யிருந்த 'விஞ்ஞான ஸந்தாயின்' என்ற வடமொழிப் பள்ளியில், பதினாறு வயது நிறைந்த குமாரன், தன் திறமையினாலும் தந்தை யாரின் வறுமை காரணமாகவும் இலவசக் கல்வி கற்க அனுமதிக்கப் பட்டான்.

சிறு வயதில் குமாரன் விளையாட்டுப் பிள்ளையாக வளர்ந்து விஷமத்துக்குப் பெயர் பெற்றான். ஆள் குள்ளமான போதிலும் நல்ல உடற்கட்டும் நலமும் உள்ளவனானபடியினால், மற்றப் பிள்ளை களையெல்லாம் நீந்தல் போன்ற பயிற்சிகளில் வெல்லும் திறமை குமாரனுக்கு இருந்தது. காயிலிலும் கடலிலும் ஒரேமாதிரி நீந்து

வதிலும், மீன்பிடிப்பதிலும் குமாரன் மிடுக்கனுக இருந்தான். ஒரு முறை பெருமீன் ஒன்று தூண்டிலை ஒடித்துவிட்டு ஆழத்திற்குள் ஓடிவிட்டது. ஒன்றுக்கும் அஞ்சாமல் குமாரன் அதைப் பின் தொடர்ந்து நீந்திப் பிடித்தான். தோல்வியைக் கண்டு தளராமல், நினைத்த காரியத்தை எப்பாடுபட்டும் செய்துமுடிக்கும் ஆற்றல் அன்றே தனக்குண்டு என்று குமாரன் புலப்படுத்தினுன்.

வடமொழியைத் தீவிரமாகப் படித்து, எளிதில் கவிபுனையும் திறனை அடைந்த குமாரன் அந்நாளிலேயே பாலகவி என்று புகழ் பெற்ருன். பெரும் கவிஞராகிய குஞ்சிக்குட்டன் தம்புரான், கேரளத்தின் அன்றைக் கவிஞர்களைத் தாம் எழுதிய 'கவி பாரதம்' என்ற நூலில் பாத்திரங்களாகக் குறிப்பிட்டிருந்தார். அதில் ஈழவ ஜாதியைச் சேர்ந்த கவிஞர்கள் புறக்கணிக்கப் பட்டனர். அதற்குப் பழிவாங்குவதற்காக மூலூர் பத்மநாப பணிக்கர் என்ற வேறு ஒரு கவிஞர் எழுதிய 'கவி ராமாயணம்' என்ற நூலில், மற்றக் கவிகளைப்பற்றி எழுதும் வேளையில், என். கே. குமாரனையும் ஒரு வானர வீரனுகக் குறிப்பிட்டு எழுதியிருக்கிருர்.

விஞ்ஞானஸந்தாயினி பாடசாலையின் தலைமையாசிரியர், மணம்பூர்க் கோவிந்தன் ஆசான் வாயிலாகக் குமாரன் ஓராண்டுக்குள், மாகம், நைஷதம், சாகுந்தலம், அலங்கார நூலாகிய குவலயானந்தம் ஆகிய புத்தகங்களைப் பாடம் கேட்டான். மாணுக்கர்கள் சொந்தமாகக் கவிதை புனைவது பாடசாலையின் போதனு முறைகளில் ஒன்று. குமாரன் நிமிஷ கவி என்று பெயர் பெற்ருன். அம்மாதிரிக் கவிதைகளில் இலக்கிய உயர்வு அதிகம் இருக்காது. இலக்கணமும், அலங்காரங்களும் எதுகை மோனைகளுமே இருக்கும். அங்கே படிக்கும்போது குமாரன் "வள்ளி விவாகம்" என்று நாடோடிப் பாணியில் அமைந்த ஒரு கவிதையையும், "உஷா கல்யாணம்" என்ற செய்யுள் நாடகத்தையும் எழுதினுன். உஷா கல்யாண நாடகத்தைப் பலமுறை பாடசாலை மாணவர்கள் அரங்கேற்றினுர்கள்.

இரண்டு வருடங்கள் அங்கே படிக்கும்போதே இனிமேல் இந்த மாணவனுக்கு அந்தப் பள்ளிக்கூடத்தில் படிப்பதற்கு ஒன்றுமில்லை என்ற நிலை ஏற்பட்டது. சாகுந்தல நாடகம் பாடம் கேட்கும் போது, ஒரு செய்யுளின் நுட்பமான பொருள் என்னவென்பது பற்றி ஆசிரியருக்கும் மாணவனுக்கும் முரண்பாடு உண்டாயிற்று. அந்தத் தர்க்கத்தில் மாணவனே வென்ருன், அன்று குமாரனுக்கு வயது பதினெட்டே!

# 2. சுவாமியும் சின்னசுவாமியும்

இன்று முன்னேற்றப் பாதையில் விரைவாகப் பாய்ந்தோடும் ஈழவ-தீய சமுதாயம் நூறு வருடங்களுக்கு முன் கேரளத்தில் எந்த நிலையில் இருந்தது என்பதை நம்மால் கனவிலும்கூட எண்ணிப் பார்க்க முடியாது. அன்றாட வாழ்க்கையில் அன்று அவர்களுக்கு நேரிட்ட இடைஞ்சல்கள் பல. பள்ளிக்கூடங்களில் அவர்களைச் சேர்க்கமாட்டார்கள். கோயில்களுக்கு அருகே உள்ள சில பாதைகள் வழியாகக்கூட அவர்கள் நடக்கக் கூடாது. சர்க்கார் உத்தியோகங்கள் மேற்சாதியினருக்கு மட்டும் ஒதுக்கி வைக்கப் பட்டிருந்தன. ஈழவர்களுக்கு மரமேறுதல், வேளாண்மை, நெசவு என்ற சுருங்கிய சில தொழில்கள் மட்டுமே அனுமதிக்கப்பட்டிருந்தன. அவற்றில் கிடைக்கும் அற்பமான ஊதியத்தைமட்டும் கொண்டு அவர்கள் உயிர் வாழ வேண்டும். திருவாங்கூர், கொச்சி ஆகிய இடங்களில் இருந்த குறுநில மன்னர்களின் கீழே பிற்போக்கு இனத்தவர்களின் நிலை, பிரிட்டிஷ் ஆட்சிக்குட்பட்ட இடங்களில் இருந்த நிலையை விட மோசமாக இருந்தது. 1896ம் வருடம் பதின் மூவாயிரம் ஈழவர்கள் கையெழுத்திட்ட ஒரு மனு திருவாங்கூர் மன்னருக்கு அளிக்கப்பட்டது. அதிற் கண்ட வேண்டுகோள் என்னவென்று நினைக்கிறீர்கள்? ஈழவர்களும் பள்ளிக்கூடங்களில் சேர்ந்து படிப்பதற்கு அனுமதியளிக்கவேண்டும்! ஈழவர்களுக்கும் சர்க்கார் உத்தியோகங்கள் தரவேண்டும்! இத்தகைய மிதமான கோரிக்கைகளைக்கூட அன்றைய திருவாங்கூர் அரசு அனுமதிக்க வில்லை. அதற்குக் கிடைத்த பதிலில், பெரும்பான்மையான ஈழவ மக்கள் தங்களுக்குப் படிப்பும் சர்க்கார் உத்தியோகமும் வேண்டாம் என்றே கருதுவதாகச் சர்க்கார் தரப்பில் சொன்னார்கள்.

ஜாதி என்ற அளவுகோலில் ஈழவர்களைவிடத் தாழ்மையான படியில் இருந்தவர்கள் உண்டு, அவர்கள் சொல்லொணுதை கொடுமைகளுக்கு ஆளாகியிருந்தார்கள். எனினும் ஈழவர்கள் மற்றவர்களைவிட ஓரளவு பொது அறிவும் ஆற்றலும் உள்ளவர் களாதலால் தங்களுக்கு இழைக்கப்படும் துன்பத்தையும் அடக்கு முறையையும்பற்றி அவர்கள் ஒருவாறு அறிந்திருந்தனர். அத் தருணத்தில்தான் ஸ்ரீ நாராயண குரு சுவாமிகள் (1856-1928)

தோன்றினர். ஆன்மீகத்துறையில் கேரளத்துக்கெல்லாம் பொது வான குரு என்ற நிலையில் அவர் இருந்த போதிலும், அவருடைய லட்சியம் தாழ்த்தப்பட்டவர்களையெல்லாம் உயர்த்த வேண்டும் என்பதுதான். ஈழவர்களுக்கு மட்டுமின்றி, பறையன், புலையன் குறவன் முதலிய எல்லாக் கீழ்க்குலத்தோருக்கும் மேற்குலத் தோரைப் போன்ற நிலை ஏற்படவேண்டும் என்று அவர் போராடினர். "தாழ்ந்த குலத்தினராகிய நீங்கள் எப்படிக் கோயில் கட்டிக் கும்பாபிஷேகம் செய்யலாம்?" என்று மேற் குலத்தார் கேட்டதற்கு, அவர் "நான் கட்டுவது பிராம்மணச் சிவனின் கோயில் அல்ல. ஈழவச் சிவனின் கோயில்!" என்று சாதுரியமாகப் பதில் சொன்னர். "மனிதனுக்கு ஒரே ஜாதி ஒரே மதம், ஒரே தெய்வம்!" என்ற அவர் கொள்கை ஒரு பெரும் சமூகப் புரட்சிக்கு அடிகோலியது. ஈழவர்களுக்கிடையே நிலவிய பல மூட நம்பிக்கைகளும், தீய நடைமுறைகளும் அவருடைய தளராத முயற்சியாலும் பிரசாரத்தாலும் அகன்றன. அவருடைய கொள்கைகள் புரட்சிகரமானவை. ஆனல் அன்பே உருவானவர். மகாத்மா காந்தியடிகளைப் போன்று எளிமையின் உறைவிடம். ஈழவமக்கள் அவரைத் தெய்வமாகவே கருதி, "சுவாமிகள்" என்று போற்றினர்கள்.

சுவாமிகளின் போதனைக்கிணங்க, **1903**-ஆம் வருடம், மே மாதம் பதினைந்தாம் தேதி, ஈழவசமுதாயத்தின் தீமைகளைப் போக்கி அவர்களை நவீன உலகின் சரியான பங்காளிகள் ஆக்கு வதை லட்சியமாகக் கொண்ட "ஸ்ரீ நாராயண தர்ம பரிபாலன யோகம்" என்ற ஒரு நிறுவனம் அமைக்கப்பட்டது, **1928**ல் சமாதி யடையும்வரை சுவாமிகள் அந்த நிறுவனத்துக்காக அல்லும் பகலும் இடையருது உழைத்தார். அவருடைய ஆன்மீக உணர்ச்சி யும் எழுச்சியும், அன்றும் இன்றும் அந்த நிறுவனத்துக்கு ஊன்று கோலாக இருந்து வருகின்றன. ஐம்பது வருடங்களுக்கு முன்பு கல்லூரிகளில் சேர்ந்து படித்த ஈழவர்களை விரல்விட்டு எண்ணி விடலாம். இன்றோ கல்லூரிப்படிப்பு இல்லாத ஈழவ இளைஞர்களைக் காண்பது அரிது. அவர்கள் சர்க்காரிலும் மற்ற நிறுவனங்களிலும் தங்களுக்கு உரிய இடங்களைப் பெற்றுள்ளார்கள். எஸ்.என்.டி.பி. யோகம் என்று ஆங்கிலத்தில் சுருக்கமாக அழைக்கப்படும் ஸ்ரீ நாராயண தர்ம பரிபாலன யோகத்துக்குச் சொந்தமாக அனேக பள்ளிக்கூடங்களும், கல்லூரிகளும், மருத்துவமனைகளும் உள்ளன. இதற்கெல்லாம் காரணம் ஸ்ரீ நாராயண குருசுவாமிகளின் உழைப்பும் அருளுமேயாகும்.

சுவாமிகளிடமிருந்து நேரில் உபதேசமும் ஊக்கமும் பெற்றுப் பெரும் வெற்றிகளை மனித குலத்துக்கும் ஈழவ சமுதாயத்துக்கும் காணிக்கையாக வைத்த பெரியோர்களில் முதன்மையானவர்

குமாரன் ஆசான், முதன் முறையாக சுவாமிகளைக் காணும்போது ஆசானுக்கு வயது பதினெட்டு, சுவாமிகளுக்கு அப்போது முப்பத்தாறு வயது. அன்றே அவர் உன்னதமான தவயோகி என்று பெயர் பெற்றிருந்தார். விவரிக்க இயலாத ஒரு கவர்ச்சியால் குமாரன் சுவாமிகளிடம் இழுக்கப்பட்டான். சுவாமிகளுக்கும் அது போன்ற ஓர் உணர்வும், நாளை குமாரன் நமக்கு உதவியாக இருந்து இயங்குவான் என்ற அறிவும் இருந்தன. ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸரும் பிற்காலத்தில் விவேகானந்தர் என்று புகழ்பெற்ற நரேந்திரரும் ஒருவரை ஒருவர் முதல் முறையாகக் கண்ட தருணத்தில் அவர்களிடையே என்ன உணர்ச்சிகள் பொங்கி வழிந்தனவோ, அதே உணர்ச்சிகள்தான் இங்கும் இருந்திருக்க வேண்டும், அன்று முதல் குமாரனின் வாழ்க்கையிலும் ஒரு திருப்பமும் ஒரு புதிய போக்கும் உண்டாயின. அவர்கள் இருவரிடையே இருந்த பற்றும் ஆதரவும், அவர்கள் இருவருக்குமட்டுமின்றி, ஈழவ சமுதாயத்துக்கும் கேரள நாட்டுக்கும் அளவற்ற பயனை அளித்தன.

குமாரன் படிப்பை நிறுத்தி விட்டபோதிலும், கலைமகள் தொண்டனுகப் புத்தகமும் கையுமாகவே இருந்தான். எந்த அறிவையும் கணநேரத்துக்குள் தனக்குள் அடக்கிக்கொள்ளும் குமாரன், தமிழ் மலையாளம் சம்ஸ்கிருதம் ஆகிய மும்மொழிகளிலும் தேர்ந்தவனுக இருந்தான், ஸுப்ரம்மண்ய சதகம், பக்த விலாஸம் என்ற கவிதைகளை இயற்றினுன். நாராயண குரு, சீடரின் கவிதைகளைக் கேட்டு இன்புற்றூர். மேலும் பாமாலைகளைப் பாடி நாமங்களுக்குக் காணிக்கை செலுத்துமாறு ஊக்கினுர். அதே சமயம் சிருங்கார ரஸம் அளவுக்கு மீறிப் போகக்கூடாது என்றும் எச்சரித்தார். சுவாமிகளின் அருள் மொழிகள் குமாரனின் வளரும் மனத்தில் ஆழமாகப் பதிந்தன.

சமயம் கிடைத்த போது குமாரன் தன் நண்பர்களுக்கு வடமொழி கற்றுக் கொடுக்கும் பழக்கம் இருந்தது. அதனுல் அவனுக்கும் குமாரன் ஆசான் என்ற பெயர் நிலைத்து விட்டது. மலையாள இலக்கியத்தில் குமாரன் ஆசான் என்று முழுப்பெயராக அழைக்காமல் ஆசான் என்று குறுக்கிச் சொன்னுலும் அது குமாரன் ஆசானையே குறிக்கும். நாராயண குரு அடிக்கடி காயிக் கரைக்கு வருவார். இருவரும் என்ன என்ன விஷயங்களைப்பற்றிப் பேசிக் கொண்டார்கள் என்பதை அறியக் குறிப்பு ஒன்றும் இல்லை. சீடனின் வாழ்க்கையிலும் அறிவிலும் தீவிரமான மாற்றங்கள் உண்டாயின. ஆசான் தனிமையை நாடிக் காடுகளுக்கும் மலைகளுக்கும் போகத் தொடங்கினுர். ஆன்மிக அறிவினுல் அலைக் கழிக்கப்பட்ட உள்ளம் இறைவனிடம் புகலிடம் பெற ஏகாந்த நிலையை நாடியது போலும்!

இளைஞனாகிய குமாரன் செம் பொற்சிலை போன்ற வடிவினன். உயரம் குறைவு. திரண்டு தடித்த கழுத்தின் மேல் வட்டமான தலை, சுருட்டை முடி. ஒளி படைத்த கண்களும் மிடுக்கு நடையும் கண்டவர்களையெல்லாம் கவரும். குமாரனை நன்கறியாதவர்கள் கர்வம் பிடித்தவன் என்று நினைத்துக் கொள்ளலாம். அந்தக் கட்டிளங்காளையைச் சுவாமிகள் அருவிப்புரத்துக்கு வரும்படி அழைத்தார். எல்லாவற்றையும் விட்டுக் குமாரன் நாராயண குருவின் பின்னே நடந்தான். அடுத்த மூன்று ஆண்டுகள் குருவும் சீடனும் ஒன்றாக வாழ்ந்தனர். நெய்யாறு நதிக்கரையில் உள்ள அருவிப்புரம் என்பது எழில் மிகுந்த காட்டுப் பிரதேசம். அங்கு மனத்தையடக்கி யோக முறைகளை எளிதில் கற்பிக்கலாம் என்று தான் சுவாமிகள் குமாரனை அழைத்துப் போனார். அவருடைய முதல் பர்ணசாலையும் அங்கே தான் இருக்கிறது. இன்று அது ஒரு புனித யாத்திரைத்தலமாக விளங்குகிறது.

பிற்காலத்தில் குமாரன் ஆசான், அதைப்பற்றி ‘விவேகோதயம்’ என்ற மாத இதழில் எழுதியிருக்கிறார். “ஏகாந்தமான காட்டுக்கு நடுவே குதித்துப் பாயும் ஆறு; ஆற்று நீர் பாறைகளுக்குமேல் அடித்துப்பாயும் ஒலி; ஆற்றங்கரை மணலுக்கு இரு புறமும் உயர்ந்த கரைகளும் மலைகளும் எங்கு நோக்கினும் பசுமை. இவையெல்லாம் சுவாமிகளின் மனத்தில் இன்பத்தை உண்டாக்கின. ஏதாவது ஒரு பாறையிடுக்கில் அவர் நாள் கணக்கில் உணவின்றித் தவமியற்றுவார். நாட்கள் செல்லச் செல்லத்தான் மக்கள் இந்த விசித்திர யோகியைப்பற்றித் தெரிந்து கொண்டார்கள்.”

சுவாமிகள் 1885ம் வருடம் அங்கு வந்தார். மூன்று ஆண்டுகளுக்குப் பிறகு அங்கு ஓர் ஆலயம் உருவாயிற்று. 1892ல் குமாரன் அவருடன் அங்கே போய் சேர்ந்தான். மூன்று ஆண்டுகள் அந்த நட்பு இணைபிரியாமல் நீடித்தது. இருவரும் எங்கும் ஒன்றாகவே போய் ஜனங்களுக்கு அறிவுரை வழங்குவார்கள். வாழ்க்கையின் சிக்கல்களை விடுவிக்க வழி சொல்லிக் கொடுப்பார்கள். சங்கச் சிறப்பால் யோக முறைகளைக் கற்ற குமாரனை, மக்கள் சின்ன சுவாமி என்று சிறப்பிக்கத் தொடங்கினார்கள். கொஞ்சங்கொஞ்சமாகக் குமாரன் குடும்பத்திலிருந்து அகன்றான்.

ஒரு சிவராத்திரியன்று குமாரனின் மாமனும், அண்ணனும் அங்கே வந்திருந்தார்கள். சுவாமிகள் ஆசிரமத்தின் மண்டபத்தில் வீற்றிருந்தார். குமாரன் அருகில் இருந்தான். வந்தவர்களுடன் குமாரன் கடைசி வரை பேசவில்லை. சுவாமிகள் மட்டும் சரளமாகப் பேசிக் கொண்டிருந்தார். வந்தவர்கள் குமாரனின் தாய் அவனைப் பார்க்க விரும்புவதாகவும், அதனால் அவனை வீட்டுக்கு அழைத்துப் போக வந்திருப்பதாகவும், தெரிவித்தார்கள். சுவாமி

கள் அதற்கிசைந்தார். குமாரன் வாயே திறக்கவில்லை. பிறகு சுவாமிகளாகவே அவன் ஓணம் பண்டிகைக்கு வருவான் என்று சொன்னார். அவ்வாறே குமாரன் பண்டிகைக்கு மட்டும் வீட்டுக்குப் போய்விட்டுத் திரும்பி வந்துவிட்டான். போகும் போது கணியார் வகுப்பைச் சேர்ந்த ஒரு நண்பனையும் கூட்டிக் கொண்டு போய், "அவனின்றி நான் வீட்டுக்குள் வந்து சாப்பிட மாட்டேன்" என்று சொல்லி, தந்தையையும் அவர்களுடன் இருந்து உண்ணும்படி செய்தான்.

சுவாமிகளுடன் வாழ்ந்தபோது குமாரன் அனேக வேதாந்தப் புத்தகங்களை வாசித்துப் புரிந்து கொண்டான். யோகாப்பியா சங்களை முறையாகக் கற்றான். முன்பே அரிய குணங்களை அடைந் திருந்த குமாரன் குரு சுவாமிகளின் தொடர்பினால் புடமிட்ட பொன் போல மெருகு பெற்றான். அருவிப் புரத்தில் இருந்த போது தான் 'சிவஸ்தோத்ரமாலை'யை எழுதினான். குருவும் சீடனும் பெரிய சிவனடியார்கள் ஆனார்கள்.

# 3. அடிவானத்துக்கு அப்பால்

ஆன்மீகத் துறையில் மட்டுமின்றி, கல்வி, சமுதாய நலன் முதலிய துறைகளிலும் ஸ்ரீ நாராயண குரு ஈழ மக்களுக்கு வழிகாட்டியாக வும் தனிப்பெருந் தலைவராகவும் இருந்தார். விதியை மதியால் வெல்லலாம் என்ற உண்மையை மற்ற எல்லாரையும்விடத் திண்ண மாக அவர் அறிந்திருந்தார். அறிவுடையோர்கள் நாளடைவில் இடையூறுகளையெல்லாம் வென்று மனித சமூகத்தில் தங்களுக்குரிய இடத்தைப் பெறுவார்கள் என்பதில் அவருக்கு ஐயமேயில்லை. இறைவனுக்கு கோயிற் கட்டும் பணியில் அவர் ஈடுபட்ட போதிலும், என்றும் நிலைநிற்பது கலைமகள் ஆலயமே என்பது அவர் கண்ட உண்மை. "கோயில் கட்டுவதற்குப் பணம் செலவிடு வதைச் சிலர் விரும்பவில்லை. அதற்காக அதை அறவே நிறுத்தக்கூடாது. பெரிய கோயில்களுக்குப் பதிலாகச் சிறியவை போதும். ஜாதி வேற்றுமையை அகற்ற உதவுவது அறிவு. அறிவின் ஆலயங்களை எங்கும் நிறுவுவோம். அதனால் மனிதனைப் பேணி வளர்ப்போம்." என்று 1917ல் சுவாமிகள் எழுதினார்.

கல்வி, சமூகநலம் என்ற துறைகளில் அவசியமான மாற்றங்கள் உண்டாகுமாறு வழி வகுக்கச் சுவாமிகள் குமாரன் ஆசானின் உதவியை நாடினுர். அதற்கு முதற்படியாகக் குமாரனுக்கு நல்ல கல்வியறிவு புகட்ட வேண்டுமே. அதைப் பற்றி ஈழவர்களின் வேறு ஒரு சிறந்த தலைவராகிய டாக்டர் பப்புவுடன் சுவாமிகள் கலந்தாலோசித்தார். டாக்டர் பப்பு, ஈழவர் என்ற ஒரே காரணத்தால் திருவாங்கூரில் முன்னுக்கு வர இயலாமல் மைசூர் அரசாங்கத்தில் வேலை செய்ய வேண்டியிருந்தது. பொருளாதாரத் துறையில் டாக்டர் பப்புவும் சுவாமிகளைப்போலவே ஈழவர்களுக்கு வழி காட்டிக் கொடுத்தார்.

கி. பி. 1861-ல் பிறந்த டாக்டர் பப்பு, நாராயணகுரு சுவாமிகளை விட நான்கு வயது இளையவர். ஈழவர்களுக்குப் படிப்பு விலக்கப்பட்டிருந்த காலத்தில் ஓர் ஆங்கிலேயரின் தயவால் திருவனந்தபுரம் இங்கிலீஷ் உயர்நிலைப்பள்ளியில் அவருக்கு இடம் கிடைத்தது. அந்தக் காலத்து எப். ஏ. பரீட்சையில் தேர்ச்சி பெற்றதும், எல்லாவிதமான தகுதிகளும் இருந்தபோதிலும், பப்புவுக்குத் திருவாங்கூர்ச் சர்க்கார் மருத்துவப்பள்ளியில் இடம் கிடைக்கவில்லை. தோல்வி கண்டு தளராமல் பப்பு சென்னைக்குச் சென்று எல். எம். எஸ். என்ற பரீட்சைக்குப் படித்துப் பட்டம் பெற்றுர். மீண்டும் வேலைக்காக மனுச் செய்தபோது திருவாங்கூர் அரசு அதை தள்ளிவிட்டது, திருவாங்கூரின் நஷ்டம் மைசூரின் லாபமாயிற்று, மைசூரில் அவர் சுகாதார அதிகாரியாகவும், கிருமி நாச மருந்துகள் உற்பத்திச் சாலையின் தலைவராகவும் பணியாற்றினுர். அந்தக் காலத்திலேயே அவர் மாதம் ஆயிரம் ரூபாய் சம்பளம் வாங்கினுர் என்றுல், அவருடைய அந்தஸ்து எப்படியிருந்ததென்று ஊகித்துக்கொள்ளலாம். எல்லாம் இருந்தபோதிலும் அவரும் ஜாதி காரணமாக அவமானம் அடைய வேண்டியிருந்தது.

டாக்டர் பப்பு ஈழவ சமுதாயத்திற்குச் செய்திருக்கும் தொண்டு சரியானபடி மதிப்பீடு செய்யப்படவில்லை. திட்டங்கள் வகுப்பதிலும் நிறுவனங்கள் செவ்வனே இயங்கச் செய்வதிலும், அவர் நிபுணர். ஈழவர் விண்ணப்பதைத் திருவிதாங்கூர் அரசுக்கு அளிப்பதிலும், ஸ்ரீ நாராயண தர்ம பரிபாலன யோகத்தை அமைப்பதிலும் அவருக்கு முதன்மையான பங்கு உண்டு. தமது சமுதாய முன்னேற்றம் என்ற ஒரே ஒரு லட்சியத்துக்காக அவர் தமது உடல் பொருள் அனைத்தையும் மனமுவந்து வழங்கினுர். அவரும் நாராயண குருசுவாமிகளும் நண்பர்களாக ஒரே லட்சியத்துக்காகப் போராடினுர்கள். இது ஈழவர்களின் நல்லகாலம். ஊக்கம் தெளிவு, உணர்வு, முதிர்ச்சி என்ற குணங்கள் இருவரிடத்திலும்

மிகுதியாக இருந்தன. குமாரன் ஆசான் இருவருக்கும் சீடனுக வளர்ந்து விரைவில் தக்க வழித்தோன்றலானுர்.

கி.பி. 1895ல் சுவாமிகளும் சிஷ்யர்களும் தேசயாத்திரையாகப் புறப்பட்டு பங்களூருக்குப் போனுர்கள். டாக்டர் பப்பு அவர்களை வரவேற்று உபசரித்தார். இரு தலைவர்களும் அன்றைய நிலைமையைப் பற்றிச் சிந்தித்ததன் பயனுக, சமுதாயத்தைச் சேர்ந்த இளைஞர்களின் முன்னேற்றத்தால் மட்டுமே எதிர்காலத்தில் தாங்கள் நினைக்கும் நன்மைகள் உண்டாகும் என்பதை உணர்ந்தனர். ஓர் இளைஞரின் படிப்புச் செலவைத் தாம் ஏற்றுக்கொள்வதாக டாக்டர் பப்பு அறிவித்தார். ''அப்படியானுல் குமாரனைப் படிக்கவைக்கும் செலவு உங்களுடையது'' என்று சுவாமிகள் சொல்லிவிட்டார், குருவின் வாக்கை ஆணையாக ஏற்றுக் கொண்டார் டாக்டர் பப்பு. குமாரனைப் பங்களூரிலேயே விட்டுவிட்டுச் சுவாமிகள் தமிழ்நாட்டில் சிதம்பரம், மதுரை போன்ற புனிதத்தலங்களைத் தரிசித்துக்கொண்டு திருநெல்வேலி வழியாகத் திருவனந்தபுரம் வந்து சேர்ந்தார். குமாரனுல் சுவாமிகளின் பிரிவைத் தாங்கமுடியவில்லை. மேற்படிப்பில் ஆசை ஒருபுறம்; சுவாமிகளின் பிரிவு ஒரு புறம்; இவற்றுக்கு நடுவே குமாரன் கண்ணீர் சிந்தினுன்.

பங்களூரில் இருந்த வரையில் குமாரன் டாக்டர் பப்புவின் குடும்பத்தில் மகனைப்போலவே வளர்த்து வந்தான். அவனுடைய வாழ்க்கையில் அது ஒரு புதிய திருப்பம். இருபத்திரண்டாம் வயதில் ஸ்ரீ ஜயசாம ராஜேந்திரர் ஸம்ஸ்கிருத கலாசாலையில் மீண்டும் படிக்கத் தொடங்கினுன். அந்தக் கல்லூரி பிராம்மணர்களுக்கு மட்டுமென்று வைத்த நிறுவனமாக இருந்தது. அன்று மைசூர் திவானுக இருந்த ஸர் கே. சேஷாத்திரி ஐயர் அவர்களிடம் டாக்டர் பப்பு தனியே விண்ணப்பித்துக்கொண்டதனுல் தான் குமாரனுக்கு இடம் கிடைத்தது, குமாரன் ஒருவன் மட்டுமே அதில் பிராம்மணனல்லாத மாணவன், அன்று இருந்த நிலைபற்றிக் குமாரன் தன் நண்பன் ஒருவனுக்கு எழுதிய கடிதத்திலிருந்து இதை ஒருவிதமாக உணரலாம்.

பெங்களூர்

அருமை நண்பா, 1896, ஸெப்டம்பர், 1.

நீ அனுப்பிய புத்தகமும் கடிதமும் கிடைத்தன. இன்றுவரை பதில் எழுதாமைக்கு மன்னிக்க வேண்டும். உனக்கு மட்டுமல்ல. கக்கக்குழியில் உள்ள மற்ற நண்பனுக்கும் எழுதவில்லை. எழுதாத குற்றத்துக்கு நான்தான் பொறுப்பு.

நான் இவ்வூர் வடமொழிக் கல்லூரியில் சேர்ந்திருக்கிறேன். இங்கு நான் மட்டுமே பிராம்மணன் அல்லாத மாணவன். நான்

இங்குப் படிப்பதற்கும் பெரிய எதிர்ப்பு இருந்தது. காலம் செல்லச் செல்ல எதிர்ப்பு மங்கி வருகின்றது. இப்போது எனக்கு உபகாரச் சம்பளமாக மாதம் ஒரு ரூபாய் தருகிறுர்கள். கொஞ்சம் கூடக் கிடைக்கலாம் என்று தோன்றுகிறது. நான் இப்போது 'நீலக் கண்டீயம்' படித்துக்கொண்டிருக்கிறேன்.

இங்கு எல்லாம் நலமே. அங்கு நம் நண்பர்களின் நலத்தை அறிவிக்க வேண்டும். நான் ஒவ்வொருவருக்கும் எழுத விரும்பு கிறேன், ஆனுல் நேரமின்மையும் என் சோம்பலும் குறுக்கே நிற்கின்றன.

ஓ! இப்போது கவிதை புனைவதற்கு வேண்டிய நேரம் கிடைப் பதில்லை. எனினும் மலையாளத்திலும் வடமொழியிலும் சில எழுதி னேன்.

தெய்வம் உங்களுக்கு எல்லா நன்மைகளும் அருளுமாறு வேண்டுகின்றேன்.

உன் அன்புள்ள,
குமார்.

ஆசான் கல்லூரியில் மூன்று ஆண்டுகள் படித்தார். நியாய வித்வான் பரீட்சைக்கு தர்க்க சாஸ்திரம் இஷ்டபாடமாக இருந்தது. பரீட்சைகளில் நல்ல தேர்ச்சி பெற்றுர். இறுதிப் பரீட்சையில் முதல்வராக வெற்றிபெறுவோம் என்ற நம்பிக்கை இருந்தது. கூடப் படித்தவர்கள் பொறுமையால் எப்படியாவது குமாரனை விரட்டி யோட்டி விட வேண்டுமென்று சூழ்ச்சி செய் தார்கள். வேதியரல்லாதவர் வடமொழி பயிலக்கூடாது. வேத சாஸ்திரங்கள் படிக்க கூடாது என்று கிளர்ச்சி செய்தார்கள். முடி வில் ஒரு நாள் குமாரன் கல்லூரியிலிருந்து வெளியேறவேண்டும் என்று அரசு உத்திரவிட்டது. அதனுல் இறுதித் தேர்வுக்கு எழுத முடியவில்லை.

அதே சமயத்தில் பங்களூரில் பிளேக் நோய் பரவியது. கல்லூரி அடைக்கப்பட்டது. பிராம்மணரும், பிராம்மணர் அல்லாதவரும் நோய்க்கு அஞ்சி யோடினுர்கள். எல்லாவற்றுக்கும் மேலாக, மேற் படிப்புக்காக டாக்டர் பப்பு ஐரோப்பா செல்ல வேண்டியிருந்தது. எல்லாம் கூடி ஆசானுக்கு ஒரே ஏமாற்றம்! திக்கற்றவனுக்கு தெய்வமே துணை. டாக்டர் பப்புவின் நண்பர் டாக்டர் நஞ்சுண்ட ராவ் அவர்கள் சென்னையில் வசித்து வந்தார். குமாரன் அவரிடம் ஒப்படைக்கப் பெற்றுன். அவரும் குமாரனிடம் மிகவும் பிரிய முள்ளவராக இருந்தார். ஆசானின் அறிவும் எளிமையும் அவரைக் கவர்ந்தன. ஆசான் தம் வீட்டிலேயே வசிக்க வேண்டும் என்று அவர் சொல்லிவிட்டார்.

சென்னையில் ஒரு பண்டிதரிடம் பாடம் கேட்டுக்கொண்டு ஆசான் ஆறு மாத காலம் தங்கினுர். டாக்டர் பப்புவின் யோசனை

யின் பேரில் பிறகு டாக்டர் ராவ் ஆசானைக் கல்கத்தாவிற்கு அனுப்பினார். டாக்டர் பப்புவின் கணக்கில் மாதம் பத்து ரூபாய் கொடுத்து வந்த டாக்டர் ராவ் தம் சொந்தக் கணக்காக மூன்று ரூபாய் கூடச் சேர்த்து ஆசானுக்கு அனுப்பி வைத்தார்.

ஆசான் கல்கத்தா வடமொழிக் கல்லூரியில் சேர்ந்து மீண்டும் நியாயசாஸ்திரம் படிக்க ஆரம்பித்தார். இலக்கணம், கவிதை என்ற இரண்டு துறைகளிலும் பயிற்சி பெற்றார். இரண்டு ஆண்டுகள் படித்தபின் 'தர்க்க தீர்த்தன்' என்ற பட்டம் பெற லாம். ஒரு நாளைக்கு இருபது மணி நேரம் உழைக்க வேண் டியிருந்தது. புத்தகப்புழுவென்று பெயர் பெற்ற ஆசான், காமாக்யநாத தர்க்கவாகீசர் என்ற குருநாதரின் அன்புக்குப் பாத்திரரானார். காமாக்யநாதருக்குக் குமாரனின் கவிதைகள் பிடித்திருந்தன. கல்கத்தாவில் இருந்தபோது குமாரன், 'ஒரு வங்கதேசிகன்' என்ற புனைப்பெயரில் மலையாளப் பத்திரிகை களுக்கு அடிக்கடி எழுதி வந்தார். 1900-ஆம் வருஷம் கல்கத்தா நகரிலும் பிளேக் வந்து பிடித்தது. பரீட்சைகள் நடப்பதற்கு முன்னமே கல்லூரிகளை மூடிவிட்டார்கள். அநேகர் கல்கத்தா நகரை விட்டு ஓடிப் போனார்கள். மீண்டும் பரீட்சை எழுத முடியாத நிலை ஏற்பட்டது. அவர்கள் படித்துப் பட்டம் பெற வேண்டுமென்று இறைவன் விதிக்கவில்லை போலும்! டாக்டர் பப்பு ஐரோப்பாவிலிருந்து திரும்பி வரும் வேளையில், டாக்டர் பப்புவின் பிரியமுள்ள சின்ன சுவாமியும் கல்கத்தாவிலிருந்து பெங்களூர் வந்து சேர்ந்தார். இருவரும் அங்கிருந்து ஒன்று சேர்ந்து திருவனந்தபுரத்தை அடைந்தனர்.

கேரளத்துக்கு வெளியே கழிந்த ஐந்து வருஷங்களும் குமாரன் ஒரு பட்டமும் பெறாததனால் பாழ் ஆயின என்று நினைக்கலாம். படிப்பது பட்டம் பெறுவதற்காக என்று எண்ணினால் அது சரி தான். ஆனால் அறிவுவளர்ச்சி தான் படிப்பின் லட்சியம் என்றால், அந்த ஐந்து வருஷங்களும் மிகவும் உபயோகமானவையாகவே இருந்தன. பலவிதமான அனுபவங்களின் வாயிலாக வாழ்க் கையின் பல்வேறு கோணங்களைப் பற்றித் தெரிந்து கொள்ளவும், லட்சிய வாழ்க்கையை எப்படி நடத்துவது என்று திட்டமிடவும் இந்த வெளியூர் வாழ்க்கை உதவியது. கன்னடம், தமிழ், வங்காளி மொழிகளில் ஓரளவு தேர்ச்சி பெறவும், அவற்றில் உள்ள மகா காவியங்களைப் பற்றித் தெரிந்து கொள்ளவும் முடிந்தது. எல்லா வற்றுக்கும் மேலாக வடமொழியிலும் ஆங்கிலத்திலும் நல்ல புலமை உண்டாயிற்று. ஆசானின் அறிவு விசாலமடைந்து குறுகிய நோக்கு அறவே போயிற்று.

கேரளத்திற்கு வெளியே செல்வதற்கு முன்பே குமாரனுக்குத் தமிழ் மொழியில் ஓரளவு பழக்கமும் வடமொழியில் சிறந்த

புலமையும் இருந்தன. பெங்களூர், கல்கத்தா வாழ்க்கையில் ஆங்கில மொழியை முறையாகக் கற்பதற்கும் ஆசானுக்கு வாய்ப்புக் கிடைத்தது, கற்க கற்க ஆங்கில இலக்கியம் அவரை ஈர்த்தது. விரைவில் அம்மொழியில் தம் உள்ளக்கிடக்கையை நன்கு வெளியிடும் ஆற்றல் பெற்ருர். பிற்காலத்தில் அவர் எழுதிய நாட்குறிப்புகளும், கவிகளின் முதற்குறிப்புகளும் ஆங்கிலத்திலேயே இருந்தன. திருவாங்கூர் பிரஜா ஸபையில் அவர் அங்கத்தினராக இருந்த வேளையில் அவர் ஆங்கிலத்தில் பேசியிருக்கிருர். அவர் ஆங்கிலம் பேசுவதை நேரில் கேட்டவர்கள் அவருடைய மொழி வன்மையைப் புகழ்ந்துள்ளனர். உச்சரிப்பு மட்டும் அத்தனை சரியாக இருக்கவில்லை என்று தெரிகிறது.

ஆசான் கல்கத்தாவில் வசித்தபோது மகாகவி தாகூருக்கு நாற்பது வயது. தாகூரின் கவிதைகள் அப்போது நன்ருகப் பரவி யிருந்தன. வங்க இலக்கியத்தில் நவீனப் புரட்சி மும்முரமாக நடந்து கொண்டிருந்த காலம். நம் கவியும் அதில் ஈடுபடாமல் இருக்க முடியுமா? 1922ல் தாகூர் கேரளத்துக்கு வந்தபோது ஆசான் 'திவ்ய கோகிலம்' என்ற கவிதையைப் புனைந்து அன்பளிப்பாகக் கொடுத்தார். மீண்டும் தாகூர் ஆல்வாய் அத்வைத ஆசிரமத்துக்கு வந்த போதும் 'ஸ்வாகத பஞ்சகம்' என்ற கவிதா மாலையை அணிவித்தார். அவர் எழுதிய விமர்சனங்களில் தாகூரின் கவிதைகளைப் பற்றியவையும் இடம் பெற்றன. மேல் நாட்டு இலக்கியம் வங்க மொழியின் மேல் செலுத்திய ஆதிக்கம் ஆசானுக்கு நன்கு தெரிந்திருந்தது. கல்கத்தாவில் இருந்த நாட்களில் ஆங்கில இலக்கியக் கருவூலத்தை அவர் நன்கு அறிந்து கொண்டார் என்பது தெளிவு.

ஸ்ரீ நாராயண குருசுவாமிகளிடம் ஆசானுக்கு இருந்த அளவற்ற பக்திக்கு இணையேயில்லை. ஆசானின் குருபக்தி தாய் தந்தையர் மேலுள்ள இயற்கையான அன்புக்கு மேற்பட்டதாக இருந்தது. டாக்டர் பப்புவிடம் ஆசானுக்கு அளவற்ற நட்பும் நன்றியும், இருந்தன. பப்புவின் மனைவியும் குழந்தைகளும் ஆசானுடன் பழகிய முறையால் அவர்கள் எல்லோரும் ஒரே குடும்பம் என்ற நிலை உண்டாயிற்று. ஆசான் பெங்களூர் விட்டுப் போய்ப் பத்து ஆண்டுகள் கழிந்த பின்னர் டாக்டர் குடும்பத்தினரும் ஆசானும் மைசூர் ராஜ்யத்தில் 'செர்ஸோப்பா அருவிக் கருகே' மீண்டும் சந்தித்தனர். அதைப்பற்றி ஆசான் தமது 'செர்ஸோப்பா அருவி' என்ற கவிதையில் கூறியிருக்கிருர். அதன் வாயிலாக அவர்களிடையே வளர்ந்து வந்த இணையற்ற அன்புப் பிணைப்பை தெரிந்து கொள்ளலாம்.

சென்னையில் டாக்டர் நஞ்சுண்ட ராவ் வீட்டிலும், கல்கத்தாவில் வேறு ஒரு பிராம்மணக் குடும்பத்தினருடனும் ஆசான் தங்கி

யிருந்தார். அவர்களும் ஆசானும் நெருங்கி அன்புடன் பழகினுர்கள். கல்கத்தாவிலிருந்து அவர் தெற்கே வரும் வேளையில் அந்தப் பிராம்மணக் குடும்பத்தினர் ரெயில் நிலையம் வரை அவரை அழுத கண்களுடன் வழியனுப்ப வந்தார்களாம். அவர்களுடன் இருந்த தொடர்பைப்பற்றி நமக்கு அதிகமான விவரங்கள் இல்லையெனினும், பிற்காலத்தில் ஒரு நாள் குமாரன், '' நான் கல்கத்தாவில் மேலும் சில நாட்கள் தங்கியிருந்தேனுல் ஒரு வங்கப் பெண்மணியைத் திருமணம் செய்து கொண்டு அங்கேயே இருந்திருப்பேன்'' என்று சொன்னுர். மலையாள இலக்கியத்துக்கு ஆசான் தொண்டு புரியவேண்டும் என்றிருக்கும்போது அது எப்படி நடக்கும்?

வங்கம், கன்னடம், தமிழகம் என்ற மாநிலங்களில் ஆசான் தங்கியிருந்தபோது அவர் நேரில் பழகி அறிந்த பல பண்டிதர்கள், கவிஞர்கள், மாணுக்கர்கள் முதலியோருடைய பழக்கத்தால் அவருடைய கொள்கைகளும் வாழ்க்கை லட்சியங்களும் நன்ருகப் புடம் செய்யப்பட்டு நிறைவு பெற்றன. கேரள மகா கவிகளில் வேறுயாருக்கும் கிடைக்காத இந்த வாய்ப்பு, குமாரன் ஆசானுக்கு மட்டுமே கிடைத்தது. மகாகவி வள்ளத்தோள் நாராயண மேனேன் வயதானபிறகுதான் இந்தியா வெங்கும் சுற்றுப் பிரயாணம் செய்யும் வசதியைப் பெற்ருர். நம் கவிக்கு அவ் வாய்ப்பு இளமையிலேயே கிடைத்துவிட்டது. அவ்வேளையில் அவருக்கு உண்டான அனுபவங்கள் அவர் மனத்தில் பசுமரத் தாணிபோல் பதிந்துவிட்டன. அவை இன்று நமக்குக் கவிதைகளின் வாயிலாகக் கிடைக்கின்றன.

## 4. உற்ருர் அழைப்பு

கேரளத்திற்குத் திரும்பி வந்த ஆசான் நேராக நாராயண குருசுவாமிகளின் அருவிக்கரை ஆசிரமத்துக்குச் சென்ருர். சுவாமிகள் நடத்தி வந்த இயக்கத்தில் மிகுதியான உற்சாகத்துடனும் ஆற்றலுடனும் ஈடுபட்டார். அன்று குமாரன் இருபத்தேழு வயதான கட்டிளங்காளை. ஈழவர்களிடையே ஸ்ரீ நாராயண குருவின் ஆன்மீக சமுதாய சேவை மிக மும்முரமாக நடந்து கொண்டிருந்தது. இனிமேல் தனி மனிதர்களின் பராமரிப்பு

மட்டும் போதாது; இயக்கத்துக்கு ஒரு ஸ்தாபன அமைப்பு இன்றி அமையாதது என்று எல்லோரும் கருதினுர்கள். அதற்காகச் சுவாமிகள் 1902ல் ஈழவர்களின் ஆன்மீக சமுதாய, கல்வி வளர்ச்சிக்காக ஸ்ரீ நாராயண தர்ம பரிபாலன யோகம் என்ற நிறுவனத்தை அமைத்தார். அவர் அதன் நிரந்தரத் தலைவராகவும் ஆணிவேராகவும் இருந்தார். நிறுவனத்தின் முக்கிய சிற்பியான டாக்டர் பப்பு துணைத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். பொதுக்காரியதரிசி என்ற பொறுப்பு, குமாரன் ஆசானிடம் ஏகமனதாக ஒப்படைக்கப்பட்டது. இதைவிட ஒரு நல்ல குழு எங்கிருந்து கிடைக்கும்? காரியாலயம் திருவனந்தபுரத்தில் திறக்கப்பட்டது.

ஆசானின் உற்சாகமும் முயற்சியும் காரணமாக வெகு விரைவில் எங்கும் கிளைகள் தோன்றின. தெற்கே கன்யாகுமாரி முதல் வடக்கே மங்களூர் வரையில் கிளைகள் உண்டாயின. அவமானமும் கொடுமையும் நிறைந்த கீழ்நிலையிலிருந்து இன்று ஈழவ சமுதாயம் மாண்புள்ள நிலைக்கு உயர்ந்திருக்கிறது என்றுல் அதற்கு ஸ்ரீ நாராயண தர்ம பரிபாலன யோகத்தின் எழுபது வருட இடையருத உழைப்பே காரணம். யோகம் இன்று உயர்ந்த நிலையில் இருப்பதற்குக் காரணம் அந்நாளில் அதற்கு அடிப்படை நன்ருக இடப்பட்டது என்பதும், அந்த அஸ்திவாரத்தை எழுப்பியவர்கள் சாதாரண மனிதர்கள் அல்ல என்பதுமே யாகும், முயற்சி திருவினையாக்கும். முயன்றவர் குமாரன் ஆசான் என்பதால் திருவும் சாதாரணமானதல்ல. வெகு விரைவில் யோகத்தின் நடவடிக்கைகள் நற்பயனை அளித்தன.

அரசியல் காரியங்களைவிடப் பொது நன்மையைப் பற்றித் தான் நிறுவனம் மிக்க சிரத்தையை மேற்கொண்டது. பொது வழிகளில் யாருக்கும் சுதந்திரமாகத் தலை நிமிர்ந்து நடக்கும் ஜீவாதார உரிமை வேண்டும். பொதுப் பணத்தால் நடத்தப்படும் கல்வி நிலையங்களில் ஈழவர்கள் உட்பட்ட தாழ்ந்த குலத்தோர் அனைவரும் அனுமதிக்கப்பட வேண்டும், ஆண்டவன் சந்நிதியில் எல்லா ஜாதியினரும் போய்த் தொழுவதற்கு அனுமதி வேண்டும் என்ற அடிப்படை உரிமைகளுக்காக யோகம் போராடியது. தீண்டாமையும், அணுகாமையும் நவீன நாகரிக சமுதாயத்துக்கு ஏற்றவையல்ல என்று எல்லோரும் ஒப்புக்கொள்ளும் அளவுக்கு யோகத்தின் பிரசாரமும் போராட்டமும் விரிந்து நின்றன. அன்று ஈழவர்கள் மற்றக் கீழ்க்குலத்தோர் ஆகியோர் மதம்மாறிக் கிறிஸ்தவர்களாகவோ முஸ்லீம்களாகவோ ஆகிவிட்டால் ஜாதி அரக்கன் அவர்களைத் தொட முடியாது. ஆனுல் டாக்டர் பப்புவும், ஆசானும், நாராயண குருசுவாமிகளும் மதமாற்றத்தை அறவே எதிர்த்தார்கள். நாம் ஹிந்துக்களாகவே தொடர்ந்து இருக்க

வேண்டும், ஹிந்து சமுதாயக் கூட்டுக்குள்ளேயே நமக்கு நீதி கிடைக்க வேண்டும், அதன் விளைவாகவே மேன்மையடைய வேண்டும் என்று தான் அம்மூவரும் குறிக்கோள் அமைத்தனர். யோகத்தின் ஆறும் ஆண்டுப் பொதுக் கூட்டத்தில் டாக்டர் பப்புவின் தலைமையுரையிலும், இருபதாம் ஆண்டு விழாக் கூட்டத்தில் குமாரன் ஆசானின் தலைமையுரையிலும் இந்தக் கருத்துத் தெளிவாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

விரைவாக வளரும் ஒரு நிறுவனத்தின் பொதுக் காரியதரிசி என்ற நிலையில் ஆசான் ஓய்வொழிவின்றி உழைக்க வேண்டியிருந்தது. கிளைகளைத் திறப்பதற்கு ஊர் ஊராக நடக்க வேண்டும். ஒவ்வோர் இடத்திலும் அதன் அதன் சூழ்நிலைக்கேற்ப ஒவ்வொரு விதமாக உரையாட வேண்டும். ஒவ்வோர் இடத்திலும் உள்ள வழக்குகளைத் தீர்த்து வைக்க வேண்டும். பெருகி வரும் கடிதப் போக்கு வரத்தை யாருடைய உதவியுமின்றிக் கவனித்துக்கொள்ள வேண்டும். மடமையில் மூழ்கிக்கிடக்கும் மக்களை எழுப்பி அவர்களுடைய உரிமைகளுக்காக அவர்களைப் போராடச் செய்ய வேண்டும். பெரும்பான்மையினரின் சோம்பலைப் போக்கி எல்லோருடனும் சேர்ந்து சமூக நீதி கிடைப்பதற்கான கிளர்ச்சியைச் செய்யும்படி தூண்டிவிட வேண்டும். இப்படியாக நீண்டு போகும் ஒரு பெரும் பட்டியலில் உள்ள எல்லாப் பொறுப்புகளையும் தாம் ஒருவராகவே தாங்கிப் பதற்றமின்றிச் செயல் இயற்றி வந்தார் குமாரன் ஆசான்.

இதற்கிடையே 'விவேகோதயம்' என்ற பத்திரிகையின் ஆசிரியர் பதவியும் அவரைத் தேடி வந்தது. பிற்காலத்தில் அது 'ஈழவா கெஸட்' என்று புகழ் பெற்றது. **1904**ம் வருடம் ஏப்ரல் மாதம் அதன் முதல் இதழ் வெளி வந்தது. உற்சாக மூட்டும் பல கட்டுரைகள், யோகத்தின் நடவடிக்கைகள் பற்றிய குறிப்புகள், அறிவு வளர்ச்சியையும் கலாசார விஷயங்களையும் பற்றிய குறிப்புகள் முதலியன அதன் பக்கங்களில் இடம் பெற்றன. கவியின் மனத்தினுள் கிடக்கும் அநேக அரிய சிந்தனைகள் அதன் மூலம் வெளிவந்தன. அதன் தலையங்கங்கள் மனத்தெளிவுக்கும், சீரிய பிரசார நடைக்கும் சான்றாக இருந்தன.

யோகத்தின் ஆண்டு விழாக்களை ஒட்டி இருமுறை தொழிற் காட்சிகளும் ஆசான் காலத்தில் நடைபெற்றன. முதற் காட்சி **1904** ல் கொல்லத்திலும், இரண்டாம் காட்சி **1906** ல் கண்ணனூரிலும் நடைபெற்றன. அதற்கு முக்கியமான பொறுப்பாளி டாக்டர் பப்பு என்றபோதிலும், அதைச் செவ்வென நடத்திய புகழ் குமாரன் ஆசானைச் சேர்ந்தது.

# 5. முதல் முயற்சிகள்

குமாரன் ஆசானுக்கு இளமை முதலே கவிதை பாடும் திறம் இருந்தபோதிலும், அவர் ஒரு நல்ல கவிஞராக உருவாவதற்குச் சிறிது காலம் பிடித்தது. இருபத்தேழு வயது வரை படிப்பு, அதற்குப்பின் கேரளத்திற்குத் திரும்பியபோதிலும் ஸ்ரீ நாராயண தர்மபரிபாலன யோகம் அமைப்பதிலும் அதன் வளர்ச்சியிலும் கவனம் சென்றது. அடுத்த சில ஆண்டுகள் அவரால் கவிதா தேவிக்குப் பாமாலை சூட்டி மகிழ இயலாமலே போயிற்று. முப்பத்தைந்தாம் வயதில்தான் 'உதிர்ந்த மலர்' வழியாக அவருடைய கவிதாம்ருதம் பொழியத் தொடங்கியது (வீணபூவு—1908). இளமைப் பருவத்துப் பிள்ளைக் கவிக்கும், 'வீணபூ'வின் கவிஞருக்கும் இடையே உள்ள காலம் வீணகப் போகவில்லை. கவிதாதேவி ஒருபுறமும் சுதந்திரதேவி மறுபுறமும் இழுத்தனர். எனினும் கவிதாதேவியே அவருக்கு விருப்பமானவள். ஆதலால் அவளே முடிவில் வென்றுள். அரங்கேற்புக்கு முன்பு பாடகர் தமக்குள்ளேயே பாடிக்கொண்டு சரிபார்ப்பது போன்ற முயற்சிகள் இங்கும் உண்டாயின.

கீழ்க்காணும் ஐந்து பாக்கள் அம்முயற்சியைச் சேர்ந்தனவாகும்.

1. ஸௌந்தர்ய லஹரி—மொழிபெயர்ப்பு—1901.
2. சிவஸ்தோத்ர மாலை—1902.
3. மேக ஸந்தேசம்—பாதி அளவேயுள்ள மொழிபெயர்ப்பு —1902.
4. விசித்ர விஜயம்—நாடகம்—1902.
5. பிரபோதசந்திரோதயம்—மொழி பெயர்ப்பு—1902.

முதலாவது, மூன்றுவது, ஐந்தாவது காவியங்கள் பெயர் பெற்ற வடமொழி இலக்கியங்களாகும். நான்காவது வடமொழி நாடகங் களின் பாணியில் எழுதிய சுதந்திர காவியம். இரண்டாவது ஒரு துதிப்பாடல், இவையெல்லாம் மரபை ஒட்டி இயற்றப்பட்ட கவிதைகள். செய்யுள் இயற்றும் முறைகளில் கவிஞருக்கு இருக்கும் சாதுரியத்தைக் காண்பிக்க இவை உதவும். இருபதாம் நூற்றுண்டின் ஆரம்பக் கட்டத்தில் உள்ள எல்லா மலையாள காவியங்களிலும், வடமொழி யாப்பிலக்கணத்தைப் பின்பற்றிய

பாடல்கள் காணப்படும். எல்லாம் அளவற்ற அலங்காரங்களுடன் நடைமுறை மரபை ஒட்டியவாறு எழுதப்பட்டிருக்கும். எல்லாம் வடமொழிக்கும் மலையாளத்துக்கும் உள்ள வேற்றுமைகள் தோன்றுதபடி இருக்கும். இருமொழிகளும் கலந்த மணிப்பிரவாள நடையும் வடமொழி இலக்கண மரபும் கலவாத பாடல்கள் இல்லை.

ஓட்டப் பந்தயத்தில் வருங்காலத்தில் பெரும் வெற்றி பெறப் போகும் வீரனும் முதலில் தவழ்ந்துதானே ஆக வேண்டும்? அது போல மாபெரும் கவிஞர்களும் முதலில் மற்றவர்களைப் பின்பற்றித் தான் பாட்டு அமைக்க முடியும். சிலருக்கு அது சுருங்கிய கால அளவிற்குள் முடிந்துவிடும். வேறு சிலருக்கு அது நீண்டு போகும். அது அவர்களுடைய மன வளர்ச்சியையும் வாழ்க்கை நிலையையும் பொறுத்திருக்கும். ஏன் இப்படி ஒரு கவிஞர் விஷயத்தில் ஆயிற்று? ஏன் மற்றவர்கள் திறத்தில் வேறு மாதிரியாயிற்று என்று விவாதம் நடத்துவதில் பயனில்லை. எல்லாச் சூழ்நிலைகளும் நமக்குத் தெரிவதுமில்லை.

மூன்று மொழிபெயர்ப்புகளிலும் காவியத்தின் யாப்பணி மிகவும் நன்றாக இருக்கிறதென்று மட்டும் சொல்லலாம், சிவ ஸ்தோத்தரமாலை 21 பக்கங்கள் உள்ள சிறு நூல். இறைவன் புகழ் பாடுவதைவிட மன நிம்மதிக்கும் நிறைவுக்கும் வேறு என்ன வேண்டும்? மாபெரும் ஆலயங்களும், சிற்பக்கலையின் எழில் பெற்ற வடிவங்களும் தராத உள் நெகிழ்வு, தோத்திரம் வழியாகக் கிடைக்கும் என்று கவிஞர் கூறுகிறார்: சரியான உவமைகளுடன் அவர் ஆண்டவன் கழலிணைகளுக்கு நம்மை அழைத்துச் செல்கிறார்.

'விசித்ர விஜயம்' நாடகத்தின் கையெழுத்துப் பிரதியிலிருந்து, கவிஞர் அதை 1902 செப்டம்பர் 19ந்தேதியன்று எழுதத் தொடங்கினார் என்று தெரிகிறது. ஆனால் என்று எழுதி முடிந்தது என்று தெரியவில்லை. அது சரிவர எழுதாத காவியம் என்பதால் அதைப் பிரசுரிக்க அவருக்கு விருப்பமில்லை. அவர் இறந்த பின்னரே அது புத்தகமாக வெளிவந்தது. பரத வாக்கியம் போன்ற மரபுகளைத் தவிர மற்றப்படி பூர்த்தியாக்கப்பட்ட காவியம் என்றுதான் அதைச் சொல்ல வேண்டும். அது நன்றாக ஆராய்ச்சி செய்யப்பட வேண்டிய நூல்.

ஐந்து அங்கங்களில் எழுதப்பட்டிருக்கும் இந் நாடகத்தின் மூலக் கதை இன்னது என்று தெரியவில்லை. காசி ராஜன் பிரம்ம தத்தன், மகத நாட்டு மன்னன் தீர்க்காதி என்பவனைப் போரில் முறியடிக்கிறான். பல ஆண்டுகள் கழித்த பின் தீர்க்காதி தன் மனைவியுடனும் மகனுடனும் காசியில் ஒரு குயவன் வீட்டில் மாறு வேடத்தில் வசித்து வருவதாகப் பிரம்மதத்தன் அறிகிறான். பிரம்மதத்தன் தங்களைக் கொலைசெய்ய உத்தரவிட்டு இருப்பதை

அறிந்தபோதிலும் தீர்க்காதி இருக்குமிடத்தை விட்டு அசைய வில்லை. அன்றிரவு படைவீரர்கள் அவர்கள் இருக்குமிடத்தை வளைத்து, தீர்க்காதியையும் அவன் மனைவியையும் துன்புறுத்து கிறார்கள். முடிவில் அவனைச் சிரச்சேதஞ் செய்வதற்காகக் கங்கைக் கப்பாற் கொண்டு செல்லும்போது, துன்புறுத்தப்பட்ட மனைவியின் சடலம் கங்கையில் மிதந்து போவதைத் தீர்க்காதி காண்கிறான். அவன் மகன் தீர்க்கபாகு நடந்ததைக் கேள்விப்பட்டு ஓடோடி வருகிறான். சாவதற்குள் தீர்க்காதி தன் மகனுக்கு, பகையைப் பகையால் வெல்வதற்குப் பதிலாக அன்பினால் வெல்ல வேண்டும் என்று உபதேசிக்கிறான். அப்போது மகனுக்கு அது பிடிக்கவில்லை.

வருடங்கள் பல ஓடுகின்றன. தீர்க்கபாகு பிரம்மதத்தனின் மகள் மிருணாளினிக்கு இசையாசிரியனாக வருகிறான். அவன் மனத்தில் பிரம்மதத்தன் மேலுள்ள விரோதமும், அவனுடைய மகள் மேலுள்ள காதலும் ஒரே சமயத்தில் வெளிப்படுகின்றன. தீர்க்கபாகுவின் மனப் போராட்டத்தைக் கவிஞர் மிகவும் அழகாக வர்ணித்திருக்கிறார். காதல் காட்சிகள் மிகவும் அழகாக அமைந் திருக்கின்றன. ஆன்மீக உலகில் லயித்திருந்த சின்னசுவாமியா இதை எழுதியவர் என்று அதிசயிக்கும்படியாக இருக்கின்றன.

ஒரு நாள் பிரம்மதத்தன் தீர்க்கபாகு ஓட்டும் தேரிலேறி வேட்டைக்குப் போகிறான். பரிவாரங்களை விட்டு அகன்று காட்டுக்குள் வெகு தூரம் போனதும் அரசன் தேரோட்டியிடம் உடைவாளைக் கொடுத்துவிட்டு உறங்குகிறான். தீர்க்கபாகுவின் நெடுநாளையப் பழியை அன்று தீர்த்துக்கொள்ள முடியும். அப்படிச் செய்தால் அவன் காதல் பாழாகும், செய்யாவிட்டால் பிரதிக்ஞை தவறும். இருதலைக்கொள்ளி எறும்பு போலத் தீர்க்கபாகு தவிக் கின்றான். அவன் முடிவில் உடைவாளை ஓங்கும்போது பகைவனுக் கருள்வாய் என்ற தந்தையின் மொழி அவன் காதில் ஒலிக்கிறது. வாள் தரையில் வீழ்கிறது. அதன் பிடி உறங்கும் மன்னனின் மேல் விழுகிறது. அவன் கண் திறக்கும்போது தீர்க்கபாகு தற்கொலை செய்துகொள்ளத் தயாராக இருக்கிறான். அதற்குப் பின் வரும் சம்பாஷணையில் எல்லாம் விளங்குகின்றன. கடைசி அங்கத்தில் தீர்க்கபாகு மிருணாளினியை மணந்துகொண்டு மன்ன னாகிறான். பிரம்மதத்தன் வானப்பிரஸ்தனாகிக் காடு செல்கிறான்.

உண்மையாக நாடகம் ஒரு விசித்திரமான விஜயத்தில்தான் முடிவடைகிறது. சாகுந்தல நாடகத்தின் சாயை இந்த நாட கத்தில் அங்குமிங்கும் காணப்படுகிறது. பாத்திரங்கள் சொல்லும் சுலோகங்கள் சரியான இலக்கணப்படி இருக்கின்றன. பழைய ரீதியில் உள்ள கதையானாலும் பல புதிய அம்சங்களும் இதில் உண்டு.

அருவிப்புரத்தில் இருக்கும்போது ஆசான் 'மார்க்கண்டேய விஜயம்' என்ற நாடகமும் எழுதினர். அது முற்றுப்பெறுமல் கையெழுத்துப் பிரதியாகவே இருக்கிறது. மரபை ஒட்டி எழுதிய இந்நாடகங்களை வேண்டிய சமயம் கிடைக்காதபோது விரைவில் எழுதித் தள்ளியவை என விட்டு விட முடியாது. ஒரு பட்டாம் பூச்சி புழு என்ற நிலையிலிருந்து பூச்சியாக உரு மாறிப் பறந்து வருவது போலவே ஒரு கவிஞனும் படிப்படியாகத்தான் வளர்ந்து வருகிறுன். பூச்சி பரிணமம் அடைந்த பிறகு கூட்டின் ஒரு மூலையைக் கிழித்துக்கொண்டு வெளி வருகிறது. கூட்டின் கழுத்து மிகவும் நெருங்கிச் சுருங்கியது, இதன் வழியாக எப்படிப் பூச்சி வரப்போகிறது என்று வியக்கிறோம். அதன் வழியாகத் தன்னைத் திணித்துக்கொண்டு வரும்போது அழுத்தத்திஞல் ஜீவரஸங்கள் எல்லாம் உடலின் எல்லாப் பாகங்களுக்கும் பரவுகின்றன. உடல் பெருத்து அழகின்றி இருப்பதற்கு மாருக இயற்கையாக வர வேண்டிய உருவம் படைத்துப் பூச்சி வெளியே வந்து பறக்கிறது. அழகே உருவான பூச்சி, ஜீவரஸங்கள் நிறைந்து பலவர்ணப் பகட்டு நிறைந்த பட்டாம் பூச்சி, நெருங்கிய கழுத்தின் வழியாக விரைவாக வந்தால் உடலும் அழகும் கெடும். வேண்டிய சமயம் எடுத்து மெதுவாகத்தான் வெளியே வரவேண்டும். அதைப் போலவே கவிஞனின் மனக்கூட்டிலிருந்து வரும் கவிதைகள் மெதுவாகவே வரவேண்டும். அப்போதுதான் அதற்கும் மங்காத அழகும் பொலிவுள்ள வடிவமும் உண்டாகும்.

# 6. உதிர்ந்த மலர்

1908-இல் கேரள இலக்கிய வானில் ஓர் அழகிய பட்டாம் பூச்சி தன் வண்ண மிக்க சிறகுகளை அங்குமிங்கும் அடித்துக் கொண்டு உயர உயரப் பறந்தது. 'வீணபூ' என்று மலையாளத்தில் பெயர்பெறும் உதிர்ந்த பூ என்ற கவிதையின் பிரசுரத்தோடு கவிஞர் குமாரன் ஆசான் தமது கவி சாம்ராஜ்யத்தின் வெற்றியில் அடி வைத்தார். காவிய உபாயகர்களுக்கிடையே அதனுடைய புதிய உருவமும் வண்ணமும் குதூகலத்தை உண்டாக்கின. நாற்பத்தொரு செய்யுட்கள் அடங்கிய இந்தச் சிறு கவிதையை மலையாள இலக்கியத்தில் நிகழ்ந்த ஒரு பெரும் புரட்சி

என்று சொல்லலாம். மூர்க்கோத்துக் குமாரன் அவர்கள் நடத்தி வந்த 'மிதவாதி' என்ற பத்திரிகையில்தான் இக் கவிதை முதன் முறையாக வெளிவந்தது. பிறகு இலக்கியப் பத்திரிகையாகிய 'பாஷா போஷிணி'யில் ஸ்ரீ ஸி. எஸ். சுப்ரமண்யன் போத்தி அவர்களுடைய உரையுடன் மீண்டும் பிரசுரிக்கப்பட்டது. உரை யாசிரியர் தம்முடைய கட்டுரையில், இந்தக் காவியத்தின் இடம் என்னவென்பது பற்றியும் அன்ருள் வரை வெளிவந்த மரபோடி ணங்கிய கவிதைகளில் உள்ள குறைகளையும் பற்றி விரிவாக எழுதி யுள்ளார். அன்றைய கவிகளில் முதன்மை பெற்றிருந்த ஸ்ரீ கேரளவர்ம வலியகோயில் தம்புரான் அவர்கள் தம் தலைமையில் உருவாக்கிக் கொண்டிருந்த மலையாள பாடபுத்த கத்தில் உதிர்ந்த பூவின் கவிதையையும் சேர்த்துவிட்டார். மலையாள இலக்கியப் பூங்காவில் அன்று வரை வீசாத ஒரு புதிய காற்று நறுமணத்துடன் வீசத் தொடங்கிற்று. அதனுல் அதற்குப் பின் எழுதப்பட்ட கவிதைகளின் போக்கே மாறிவிட்டது. அத்தகைய ஒரு கவிதையை ஈன்ற கவிஞரைப் போற்ருமல் இருக்கமுடியுமா? நவீன மலையாள இலக்கியத்தில் 'வீணபூ' ஒரு சிறந்த இடத்தைப் பெற்றது. வெறும் மொழி ஆடம்பரம் மட்டுமின்றிப் பொருளுக்கும் இடம் வேண்டும் என்பது ஒப்புக் கொள்ளப்பட்டது.

பூவைப்பற்றி ஒரு கவிதை! அதுவும் உதிர்ந்த பூவைப்பற்றிய கவிதையை, எழுதுவதற்கு என்ன காரணம்? அதை எழுதும்போது குமாரன் ஆசான் சுற்றுப் பிரயாணத்திலிருந்தார். அவர் மனத் துக்கும் நிம்மதியில்லை, ஒரு சிறு குறிப்பில் ஆசான் அதைப்பற்றிச் சொல்லியிருக்கிருர். பாலக்காட்டில் கொல்லமாண்டு 1083ல் விருச்சிக மாதத்தில் இந்தக் கவிதையை எழுதியதாகக் குறிப் பிட்டிருக்கிருர். பிறகு விவேகோதயம் பத்திரிகையில் இதைப்பற்றி விவரமாக எழுதினுர். ஸ்ரீ நாராயண குருசுவாமிகளும் ஆசானும் வேறு சிலரும் ஒரு சிவன் கோயில் பிரதிஷ்டைக்காகக் கோழிக் கோட்டிற்குப் புறப்பட்டனர். வழிநடுவே எரணுகுளத்தில் சுவாமி களுக்கும் வேறு சிலருக்கும் காலரா நோய் கண்டது. விரைவில் ஒரு சீடர் காலமாகிவிட்டார். சுவாமிகளின் நிலையும் கவலைக்கிட மாயிற்று. ஒரு மாதிரியாக நோயை அடக்கிச் சுவாமிகளை பாலக் காட்டில் டாக்டர் கிருஷ்ணனுடைய வைத்தியசாலைக்கு மேலும் மருத்துவம் பார்ப்பதற்காகக் கொண்டுபோனுர்கள். டாக்டர் கிருஷ்ணனின் வைத்தியசாலையைச் சுற்றிலும் மலர் மரங்கள் நிறைந்த தோட்டம் உண்டு. சுவாமிகளின் உடல் நலிவிலும் தரையில் விழுந்து உதிர்ந்திருக்கும் பூக்களின் நிலையிலும் உள்ள ஒப்புமை கவிஞருக்குத் தோன்றியிருக்கவேண்டும். அதை தமக்கே

உரியநடையில் சிறப்பான பாமாலையாகத் தொடுத்து அவர் கைரளி தேவிக்குக் காணிக்கையாக வைத்தார்.

இதனால் ஆசானுக்கும் சுவாமிகளுக்குமிடையே உள்ள நெருங்கிய அன்பு வெளிப்படும். அதை எழுதும்போது ஆசானின் மனம் பட்டபாட்டை நாம் உணரலாம். நிலையற்ற இவ்வுலக வாழ்க்கையையும் அதற்குப்பின் வரும் மோட்சத்தையும் சுட்டிக் காட்டுகிறார் கவி. உலகில் எத்தனையோ கவிஞர்கள் மலர்களைப் பற்றிப் பாக்கள் புனைந்துள்ளனர். கவிஞர்களின் வில்லில் எப் போதும் மலரம்புகள் இருக்கும். ஆனால் இன்றுவரை யாரும் காற்றில் கீழே விழுந்து வாடி வதங்கிய உதிர்ந்த பூவைப்பற்றிக் கவிதை எழுதியிருக்கிறார்களா என்பது ஆராய்ச்சிக்குரிய விஷயம். ஒரு வாடிய பூவை உவமையாக வைத்துக் கவிஞர் வாழ்க்கையின் அநித்யத்தை நமக்கு எடுத்துக் காட்டுகிறார். இக்கவிதை ஒரு விதத்தில் ஓர் இரங்கற்பா எனலாம். குருசுவாமிகளின் உடல்நிலை விஞரின் மனத்தில் மரணத்தைப்பற்றிய அச்சத்தை உண்டாகிக்க யிருக்கலாம். ஒவ்வொரு எண்ணமும் ஒவ்வொரு செய்யுளாக அமைந்திருக்கின்றது. ' வீணபூ ' குறிப்பிட்ட ஒருவருடைய இரங்கற்பா அல்ல, மனித வாழ்க்கைக்கே பொதுவான இரங்கற்பா என்றே கூறலாம்.

ஏற்கெனவே காவிய மரபைப்பற்றிக் குறிப்பிட்டிருக்கிறோம். பத்தொன்பதாம் நூற்றாண்டில் கேரளக் கவிகள் எல்லோரும் ஸம்ஸ்கிருத நடையைப் பின்பற்றி ஒரு மகா காவியம் எழுதா விட்டால் ஒரு கவியே அல்ல என்று நினைத்துக் கொண்டிருந் தார்கள். அது இருபதாம் நூற்றாண்டின் இருபதாம் ஆண்டுவரை தொடர்ந்திருந்தது. ஒரு கவிதை யென்றால் இத்தனை பெரிதாக இருக்க வேண்டும், இத்தனை காண்டங்கள் அமைந்திருக்க வேண்டும், இன்ன இன்ன நிகழ்ச்சிகளைப் பற்றிய வர்ணனைகள் இருக்க வேண்டும், இன்ன இன்ன அலங்காரங்கள் அதில் இடம் பெற்றிருக்க வேண்டும், இத்தனை பாக்களும் விருத்தங்களும் அடங்கியிருக்க வேண்டும் என்றெல்லாம் சட்டதிட்டங்கள் வகுக்கப்பட்டிருந்தன. பொருளைப்பற்றி யாருக்கும் கவலையில்லை. என்னவெல்லாம் இருக்கின்றன என்று கணக்குப் பார்த்தால் போதும். அப்படியே மலையாளக் கவிதை தேய்ந்து மாய்ந்து போகுமோ என்று பயந்துகொண்டிருந்த வேளையில் ஆசானின் கவிதை அதற்குப் புத்துயிர் அளித்தது. மேல் நாட்டு இலக்கி யத்தின் மேல் ஆசான் கொண்ட ஈடுபாட்டின் பயனாக நமக்குக் கிடைத்த முதல் மொட்டு, ' வீணபூ '.

அதற்கு முன்பு மலையாளத்தில் மேல் நாட்டுப் பாணியில் கவிதை இயற்றப்படவில்லை என்று கூற இயலாது. இரங்கற் பாக்களாகவே எழுதப்பட்ட சில கவிதைகள் உண்டு. ஆனால்

கவிஞனின் மனநிலையைப் பிரதிபலிக்கும் சிறு கவிதைகள் என்ற வரிசையில், 'வீணபூ' தான் முதன் முதலாக வெளிவந்தது. அதைப்பற்றித் தம் கேரள சாஹித்ய சரித்திரம் என்ற நூலில் மகாகவி உள்ளூர் பரமேசுவர ஐயர் அவர்கள், "'வீணபூ' மலையாள இலக்கியத்தில் ஒரு தனிப் பாதையை வகுத்தது. அநேகம் கவிஞர்கள் அதற்கு முன் மேல் நாட்டு இலக்கியத்தை அறிந்திருந்தனர். ஆனால் அவர்கள் வழக்குப்படி ஒரு பொருளை எடுத்துக்கொண்டு அதைப்பற்றிய தீர்க்கமான வர்ணனையாகக் கவிதையைப் புனைவது என்பதை முதலில் செய்து காட்டியவர் குமாரன் ஆசான் அவர்களே. இலக்கிய வானில் மிகவும் பிரகாசத்துடன் மின்னும் ஒரு தாரகைதான் 'வீணபூ'" என்று எழுதியுள்ளார். மலையாளத்தில் அனேகம் கட்டுரைகளிலும் புத்தகங்களிலும் இதே கருத்துப் பலராலும் எழுதப்பட்டிருக்கின்றது.

கவிஞரின் கண்களில் தரையில் வாடி வதங்கிக் கிடக்கும் ஓர் உதிர்ந்த மலர் தென்படுகின்றது. உடனே அதன் சரிதம் அவர் கண் முன்னே தோன்றுகிறது. அதற்குப்பின் வரும் ஒவ்வோர் அடியிலும் மனித வாழ்க்கையின் தாற்காலிகமான நிலையைப் பற்றியுள்ள தத்துவங்களை ஒவ்வொன்றாகத் தாவர வர்க்கத்தின் உவமையைக் கையாண்டு கவிஞர் நமக்குத் தெரிவிக்கின்றார்.

"ஓ மலரே! மிக உயர்ந்த மரக்கிளையின்மேல்
எத்தனை அழகோடு ஓர் அரசிபோலிருந்தாய் நீ!
இவ்வுலகில் நிலையான தென்பதில்லை. இன்று உன்
மேன்மை யெங்கே? நீகிடக்கும் கதிநினைத்தால்."

மலரின் இளமைப் பருவத்தைப் பற்றிக் கவி பாடுகிறார்.

"போற்றிப் பெற்ற கொடி உன்னை அன்போடு வளர்த்துன்
மேனியைத் தன் மார்பில் வைத்துத் தாலாட்டி
ஆலோலம் பாடிச் சிறு தொட்டிலும் ஆட்டித்
தன் இலைகளால் ஆலாபம் ஆர்த்தனவே, மலரே."

அச்சிறுமலர் வளர்ந்து பெரிதாகிறது.

"இவ்வண்ணம் அன்பொடு வளர்ந்த நின் அங்கம்
காலக்கிரமத்தில் அழகு பெற்று ஆடி நின்றதும்
கவின் காந்தி பெற்றது, வதனம்சிவந்தது.
அதிலொரு புதிய புன்சிரிப்புத் தூக்கி நின்றது."

முதலில் ராணியாக உவமித்த பூவைப் பிறகு ஒரு பெண்ணாக வர்ணிக்கிறார். பால் வண்ணமுள்ள நிலவிற் குளித்த மலர்க் குழந்தை, இளங்கதிரோனின் கதகதப்பில் நாட்டியமாடுகிறாள். அப்படி மொட்டு விரிந்து மலராகின்றது. பிறகு மலர்ப்பெண்ணின் முககாந்தி இளமைப்பருவத்தால் பிரகாசிக்கிறது. அவளுடைய வசீகரம் எப்படிப்பட்டது என்கிறீர்களா? கவிஞர் சொல்கிறார், அதை யாராலும் வெல்லமுடியாதென்று!

'' வைராக்யமேறிய ஒரு வைதிகனுயினும், எதிரிமுன்
பயந்தோடும் பேடியாயினும், யாராயினும்
நேரே மலர்ந்து உலுங்கிடும் உன்னை நோக்கி,
விழிதிறந்து நிற்காமற் போகமுடியுமோ ?''

அத்தனை அழகுள்ள பெண்மணியைக் கண்டால் மையல் கொள்ளாதவர் உண்டோ? எத்தனையோ காதலர்கள்! அவர் எல்லாரையும் விரட்டி விட்டாள். ஒரு நீலக்கருவண்டை மட்டும் ஏற்ருள். அவர்கள் இருவரும் கூடிக்குலாவினர். ஆனுல் எத்தனை நேரம்? இப்போது காதலனுகிய வண்டு தன் உயிரற்ற காதலியின் சடலத்தைச் சுற்றிச் சுற்றி வந்து ஓலமிடுகிறது.

'' என்னகம் நானுனக்கே எழுதிவிட்டேன்,
என் அன்ய காமுகரை யெல்லாம் மடக்கிவிட்டேன்,
என் அன்பே! இன்றென்னை விட்டுப் போய் விடாதே,
என்றெல்லாம் சொல்லி இவ்வண்டு புலம்புகிறது. ''

கைக்கு எட்டியது வாய்க்கெட்டவில்லை. அதற்குள் மதுக் கிண்ணம் அகன்றது. காதல் இன்பத்தின் கேணி, ஒரு நிமிஷ அளவில் துன்பத்தின் மருவாகவும் மாறி விடலாம். காதலுக்கு எதிரே, காதல் கிடைக்காவிடில் அதன் பலன் நிராசையும் ஏமாற்றமும் தானே? எனினும் வாழ்க்கையின் மேடு பள்ளங்களுக்கிடையே காதலைப் போன்ற ஒளி வீசும் வழிகாட்டி வேறு ஒன்றுமில்லை. எனினும் வாழ்வு விதியின் விளையாட்டுப் பொம்மை, வாழ்வுக்குப் பெரும்பகை சாவு.

'' பாவம்! மலரே, உன்னையும் தீண்டினுளே
கருணையற்ற விதி தன் கொடுங்கையினுல்?
காசே கடவுள் எனும் வேடனுக்குண்டோ
கழுகென்றும் கிளியென்றும் பாகுபாடு?''

மலர் இயற்கை யன்னையின் மகள். இரக்கமற்ற சாவு அவளைப் பிடித்துக்கொண்டோடிப் போனதும், எங்கும் அழுகுரல்கள் எழுந்தன.

'' ஆஹா! சிறு சிலந்திகள் உன்மேல் தம்கையால்
வெண்பட்டும் கச்சையும் அணிவித்தன,
அன்புள்ளவளாம் உஷையும் உன்மேலணிந்தாள்,
பனி நீரால்த் திளங்கும் வெண் முத்துமாலை. ''

'' தாரங்கள் நின்மறைவால் அழுது தவிக்கும்.
பணிக் கணங்கள் கண்ணீர் பொழியும்
நேராக நிற்கும் மரத்தை விட்டுன் சடலம்
கிடப்பதின்மேல் விழுந்து புலம்பிடும் புள்ளினங்கள். ''

இன் கவிஞர் இந்த ஆபத்து ஏன் நடந்ததென்று ஆராய்கின்ருர்.

'' ஏன்தானுனக்கே எல்லாக் குணங்களும் கிட்டினவோ?
ஏன் தான் அதைக் குரூர விதி அபகரித்ததோ?

யார்தான் அறிவார் உலகில் சிருஷ்டி ரகஸியம்?
குணமுள்ளோர் நீண்ட ஆயுளுடன் வாழார்!''

இதுபோன்று மேலும் பல கேள்விகள் கவியின் மனத்தைக் குடைகின்றன, அதெற்கெல்லாம் சரியான பதில் கிடைத்துவிடுமா? நம்மை நாமே தேற்றிக்கொள்ள வேண்டியதுதான்.

'' அழுதும் புரண்டும் பயனுண்டோ?
ஆர்க்கும் விபத்து வரலாம் அவனியிலே
ஆண்டவன் அருளால் சைதன்யமாம் சிவம்
ஏதாவது வடிவில் சேரும், ஜடமாம் சக்தியில்!''

கவிதை எப்படி முடிகிறதென்று பார்ப்போம். அதுவும் ஆசா பங்கத்தின் எதிரொலிதான்,

'' கண்களே! மூடுக! இம்மலர் கரிந்தும் அவிந்தும்
மண்ணுகும், இது வெறும் நினைவு மட்டும்.
எண்ணுக, யார்க்கும் இதுதான் கதி, என்செய்வோம்
கண்ணீரினுல்? அவனி வாழ்வு கனவு, கஷ்டம்!''

கவிதையில் எங்கும் மனம் துன்பத்தில் தோய்ந்து கிடப்பது உண்மையே. கவிதை '' ஆ '' என்ற குரலோடும், தொடங்கி ''கஷ்டம்'' என்ற வாக்கோடும் முடிகிறபடியினுல் இவையிரண்டும் பாட்டின் உள்ளடக்கம் துன்பம் என்று எடுத்துக்காட்டுகின்றன. வாழ்க்கை ஒரு கனவு. ஆனுல் அது வெறும் கனவல்ல. பொருளற்றதல்ல. பொருள் உள்ளதுதான். எனினும் எதிர் காலத்தில் வரப்போவதைக் கருதும்போது கனவுதான், பூவின் வாழ்வும் இகலோகத்தோடு முடிவடைவது இல்லை என்று கவிஞர் கூறுகிருர்.

'' குடதிசைக்கடலில் ஆழ்ந்த ஓர் விண்மீன்
குணதிசை மலையிற் சோபையோடெழுவது போல், நீயும்
இங்கிருந்து மறைந்து மேருமாமலையின்
அங்கே கல்பதருவின் கொம்பில் மிளிர்வாய்!''

உதிர்ந்த பூவுக்குப் பரலோகத்தில் ஓர் உன்னதமான ஸ்தானத்தை அளிக்கிருர் கவிஞர். அதனுல் ஆசான் ஏமாற்றத்தை உருவாக்கும் கவி என்று தள்ளிவிடமுடியாது, வருத்தம் ஆசா பங்கத்தின் வழி என்று கூறலாகாது. உலகில் இன்பதுன்பங்கள் மாறிவருவது இயற்கை. இன்றும் வருங்காலத்திலும் வாழ்வு எப்படியிருக்கும் என்று ஆராய்கையில், சுகத்தைக் காட்டிலும் துக்கம் தான் அதை உணர்வதற்கு ஒரு கருவியாக இருக்கும். உதிர்ந்த பூவிலும் தம் மற்ற கவிதைகளிலும் ஆசான் அதை நன்கு எடுத்துக் காட்டுகின்ருர்,

ஆசானின் கவிதைகளில் சிறந்தது 'வீணபூ'. அவருடைய ஒப்பற்ற தன்மையை எடுத்துக்காட்ட அது ஒன்றே போதும். அதற்குப்பின் எழுதியவை எல்லாம் அதைப் போன்றனவே, 'வீணபூ' ஒரு வெறும் பூவல்ல. வாழ்க்கையின் எதிரொலி. அதில்

எங்கும் இரண்டு தோணிகளைக் காணலாம். ஒன்று இரக்கம், மற்றொன்று எளிமையால் நலிந்து வாடுவது. பூ எளிமையானது அதனால் வாடுகிறது. அவருடைய கவிதைகளில் எல்லாம் இதே எண்ணங்கள் தொடர்ந்து வருவதைக் காணலாம். நளினி, லீலா, ஸீதா, கருணை எல்லாவற்றிலும் அவலம் இன்னும் சுவை ததும்பி வழிகிறது. கதாநாயகிகள் அனைவரும் அவர்களுடைய இனிமை யான நிலையில்தான் காட்டப்படுகிறார்கள். ஆசான் அவர்களை நம்முன் நிறுத்தும்போது, ஒன்று அவர்கள் இகலோகத்தைப் பிரியும் நிலையிலோ, அல்லது போகவாழ்க்கையை உதரித் தள்ளும் நிலையிலோ தான் இருக்கிறார்கள்.

கதாநாயகிகளின் சிந்தை நிலையை வெளிப்படுத்துகின்ற முறை யும் ஒரே மாதிரியாகத்தான் இருக்கிறது. கதாநாயகிகளின் வாழ்க் கையில் மிகவும் நாடகத்திற்கியைந்த தருணத்தில் நமக்கு முன் கொண்டு வருகிறார். அதனால் எளிதில் நம் இரக்கத்தை உடனே கவர்ந்து விடுகிறார்.

"இன்றுன்
மேன்மை யெங்கே? நீ கிடக்கும் கதி நினைத்தால்."

கால அளவில் பின்னே சென்று தோற்றங்கண்டு நிகழ்காலத் துக்கு வருகிறோம். ஆனால் அங்கு நிற்காமல் முன்னே சென்று வருங்காலத்தில் ஏதாவது நம்பிக்கைக்கும் ஆறுதலுக்கும் வழி யுண்டா என்றும் பார்ப்பதற்கு விரைகிறோம். இதுதான் ஆசான் பொதுவாகத் தமக்கென்று வகுத்துக் கொண்ட முறை, வேறு விதமாகச் சொன்னால் ஆசான் எழுதிய மற்ற எல்லாக் கவிதை களும் 'வீணபூ'வின் வழித் தோன்றல்களே! காட்சிகளும் பெயர்களும் வெவ்வேறாக இருக்கலாம். உள்ளக்கிடக்கை ஒன்றே. நளினி, ஸீதை, வாஸவதத்தை, எல்லாரும் பூக்கள்தாம். அவர் களும் உதிர்ந்தமலர்கள்தாம். சிறந்த கவிதிலகமாகிய ஏ.ஆர். ராஜ ராஜ வர்மா அவர்கள் மறைந்தபோது எழுதிய "ப்ரரோதனம்" என்ற கவிதை சரியான இரங்கற்பா ஆகும்.

உதிர்ந்தமலர்கள் ஆசானின் சிறப்பான தனி முத்திரை எனலாம். அவருடைய தத்துவ ஞானத்தை அவர் கவிதைகளின் வழியாக அறிகிறோம். பல்வேறு வருத்தங்களுக்கும் வீழ்ச்சிகளுக்கு மிடையே, கவிஞர் நம்பிக்கை, ஆசை, குறிக்கோள், அன்பு என்ற உணர்ச்சிகளை நமக்குக் காட்டிக் "கவலை வேண்டாம், இன்று கட்டுண்டோம், நாளை வாழ்வோம்" என்று சொல்கிறார்.

# 7. காதற்கவிதைகள்

## நளினி

'வீணபூ', கவிஞரின் காவியங்களில் எல்லாம் பொதுவாகக் காணப்படும் கருத்திழைகளின் தொடக்கம் என்று கண்டோம். அடுத்த கவிதையாகிய நளினி 1911ல் எழுதப்பட்டது. அதிலும் அதே இழைகள் தொடர்கின்றன. மாறுதல்கள் சில மட்டுமே உள்ளன. இந்தப் பாட்டில் உதிர்ந்த மலர் நளினி என்ற கதா நாயகி. குமாரன் ஆசானின் வாழ்நாளில் கேரள நாட்டில் நளினி என்ற பெயர் கொண்ட பெண்கள் மிகச்சிலர். இன்று நளினிகளைத் தாரளமாகக் காணலாம். வடமொழியில் நளினம் என்றால் தாமரை என்று பொருள். கதாநாயகிக்கு எந்தப் பெயர் வைத்தா லென்னவென்று தோன்றலாம். கூர்ந்து நோக்கும் போது அதற்குத் தக்க காரணங்கள் உண்டு என்று தெளிவாகும். கதாநாயகனுக்கும் அதுபோல மாற்ற முடியாத பெயரைத்தான் வைத்திருக்கிறார். நளினியாகிய தாமரைப் பெண்ணின் காதலன் திவாகரனாகிய சூரியனைத் தவிர வேறு யாராக இருக்க முடியும்? நமது காவிய மரபே அதுதானே? தாமரைப் பெண் கதிரவனைக் கண்டால் முகம் மலர்கிறாள். கதிரவன் மிகவும் அருகே வந்தால் வாடிப்போவாள். எனினும் அவர்களிடையே உள்ள காதல் என்றும் நீடித்திருப்பது. குமாரன் ஆசான் கவிதை மரபை ஒட்டிக் காவியத்தின் உவமையை நீட்டிக் கொண்டு போகிறார். காதற் சுவையையும் கூட்டுகிறார். சாதாரண மனிதர்களாகிய நளினியை யும் திவாகரனையும் கதைப் போக்கில் அழிவில்லாப் பெரும் சித்திரங்களாக்கி விடுகிறார்.

ஆசானை "ஸ்னேக காயகன்" அல்லது அன்பின் கவி என்று அழைப்பதுண்டு. அவருடைய கதாநாயகிகள் எல்லோரும் பெரும் காதலிகளாகவோ பேரன்பு படைத்தவர்களாகவோ காணப் படுவார்கள். உடலுறவுக்கு அப்பாற்பட்ட காதலை அவர் உயர்ந்த நிலையில் அமைத்தார். கதை தன் வழியே தொடரும்போது காதலர்கள் வெறும் சரீர பந்தங்களைவிட்டு அதற்கும் மேலான தூய்மையான உள்ளச் சேர்க்கையை விழைவதைக் காணலாம். அன்றைய கேரள இலக்கிய நடைக்கு இது முற்றும்மாறுபட்டது.

கவிதை மகா காவியத்துக்கும் சிருங்காரத்துக்குமிடையே ஊச லாடிக்கொண்டிருந்த தருணத்தில் இப்படிக் கற்பனைக்கு அளவற்ற இடம் கொடுத்து மரபை மாற்றி நவீன முறையில் கவிதை புனைந்த வர்களில் முதல்வர் ஆசான். 'வீண பூ'வின் வழியாக மலையாள இலக்கியக் கோயிலுக்குள்ளே புகுந்த அவர், மற்றக் கவிஞர்கள் பழமைக்கிணங்கிய கவிதைகளுடன் பிராகாரம் சுற்றி நடப்பதைக் கண்டார். அடுத்த கவிதையாகிய 'நளினி'யின் வாயிலாக அவர் நேரே கர்ப்பக்கிருகத்துக்குள்ளேயே சென்றுவிட்டார். அவர் முன்னேற்றத்தைக் கண்டவர் சிலர். காணுதவர் சிலர். ஒருவருக்கும் என்ன நடந்தது என்பது புரிந்திருக்காது. அது நவீன இலக்கி யத்தின் மிடுக்கு.

ஆசான் நவீன இலக்கிய நடையைப் பின்பற்றி உணர்ச்சி களுக்கு அழுத்தம் கொடுத்த போதிலும், பழைய மரபை அறவே புறக்கணித்து விடவில்லை. உண்மையில் அவருடைய கவிதை இரண்டு பாணிகளின் கலப்பாக இருந்ததனுல், அவரைக் கவிதா தேவியின் கோயிலிலிருந்து வெளியேற்ற முடியவில்லை. 'நளினி'க்கு "சினேகம்" என்ற பெயரும் கூடக் கவி கொடுத்திருந்தார். அதன் முகவுரை வழியாக அவருக்கு இந்தக் கவிதையின் மேலி ருந்த தனிப்பட்ட விருப்பம் வெளியாகும். 1909 ம் ஆண்டு இதை எழுதத் தொடங்கிய போதிலும், சில காலம் அது கையெழுத்துப் பிரதியாகவே இருந்தது. மீண்டும் மீண்டும் அதற்கு மெருகு ஏற்றிக் கொண்டிருந்தார். 1911 ல் தான் அது பிரசுரிக்கப்பட்டது. அதில் கவிஞரின் வாழ்க்கையோடு ஒட்டிய பகுதிகள் உண்டென்று சிலர் கருதுகின்றனர். அவருடைய தனிப்பட்ட விருப்பத்துக்கு அதுவும் ஒரு காரணமாக இருக்கலாம். முப்பது வயதில் பொதுப் பணிக்குத் தம்மையே அர்ப்பணம் செய்து கொண்ட பிரம்மசாரி யாகிய சின்னசுவாமியின் மனநிலையும், கதாநாயகன் திவாகரனின் மன நிலையும் ஒன்றே.

திவாகரனும் நளினியும் இளமையிலிருந்தே தோழர்கள். அயல் வீட்டுக்காரர்கள், வயது வந்தபோது திவாகரன் ஏதோ காரணத்தால் சந்நியாசியாகப் போய்விட்டான். அவனை மணம் செய்துகொள்ள விரும்பிய நளினிக்கு இது ஒரு பேரிடியாயிற்று. நாட்கள் செல்லச் செல்ல அவள் துயரம் மிக்கதேயன்றிக் குறைய வில்லை. அவளுடைய பெற்ருேர் அவள் திருமணத்துக்கு ஏற்பாடு செய்தனர், அதனுல் துக்கம் மிகுதியாயிற்று. நளினி நள்ளிரவில் வீட்டை விட்டு வெளியேறிக் காட்டில் உள்ள ஒரு குளத்தில் தற்கொலை செய்துகொள்ள முயலும்போது, தற்செயலாக அங்கே வந்த ஒரு சந்நியாசினி அவளைத் தடுத்துத் தன் பர்ணசாலைக்கு அழைத்துப் போகிருள்.

ஐந்து வருடங்கள் கழிந்தபின் ஒரு நாள் திவாகரன் அலைந்து திரிந்து அந்தக்காட்டின் வழியாக வருகிறான். அவனும் நளினியும் அங்குச் சந்திக்க நேருகிறது. இந்த இடத்திலிருந்து காவியம் ஆரம்பமாகிறது. காதலுக்கும் துறவுக்கும் முதலிலிருந்தே எதிர்ப்பு. இடம் இமாலயம். உஷையின் தூய்மையும் அழகும் உள்ள நளினி தடாகத்தில் நீராடிவிட்டு ஈரஉடைகளுடன் வருகிறாள். திவாகரன் அருகே வருகிறான். ஆனால் மரங்கள் நடுவே நின்று மறைக்கின்றன. திடீரென ஒருவரை ஒருவர் காண்கின் றனர். திவாகரன் மனதில் ஒருவிதமான உணர்ச்சியும் எழவில்லை. அவளை அவனால் அடையாளம் தெரிந்துகொள்ளக் கூட இயல வில்லை. ஆனால் அவளுடைய நிலையோ, அதற்கு நேர் எதிர்! அவள் அவனை எப்படி மறக்க முடியும்? காதலனைத் தெரிந்து கொள்ள வேறு அடையாளமும் வேண்டுமா ?

'' நெட்டி, ஒன்று குழம்பி நின்றாள், பின்
ஒட்டும் ஸம்பிரமம் இல்லாமலே யவள்
திட்டமாய் யதியை நோக்கிப் பாய்ந்தாள், ஆழியை
முட்ட ஓடும் அணையுடைந்த வெள்ளம் போல்.''

யதிவரனின் பாதத்தில் அவள் அப்படியே விழுந்து விடுகிறாள். அவளுடைய கூந்தல் அவன் பாதங்களை மறைக்கிறது. யோகி திவாகரனுக்குத் தூக்கி வாரிப் போடுகிறது! இவள் யார்? ஏன் இப்படிச் செய்கிறாள்? புலனை அடக்கக் கற்றவனாயிற்றே. அதனால் கோபம் வரவில்லை. நளினி அவன் நிலையைத் தெரிந்து கொண்டு பழைய நிகழ்ச்சிகளைப் பற்றிச் சொல்லித் தன் ஆராத காதலையும் தெரிவிக்கிறாள்.

'' துறவியாயிருந்தபோதும் உனைமறவாமல் நான்
உனக்காய்த் தவமிருந்தேன், இன்றுனைக் கண்டேன்.
தன்யை யானேன் ; நீ என்னை
நினைத்திருந்தாலும் இல்லாவிடினும்.''

அவள் பட்ட பாட்டை அறிந்ததும் திவாகரனுக்கு இரக்கம் உண்டாகிறது. ஆனால் முன் வைத்த காலை மாற்றிப் பின் வைக்கலாமோ? அவன் திடமாக நின்று இகலோக நட்பின் மாயையை அவளுக்குப் போதிக்க முயல்கிறான்.

'' காட்டில் அங்கொரு மகானுபாப தன்
கூட்டானாய், பவதி பாக்யமாய் நான்
போட்டே? நினக்குச் சாந்தி—விதியோகம் இனியும்
கூட்டினால் காண்போம் நாம், சுபே! ''

அன்று வரை அடக்கி வைத்திருந்த நளினியின் காதல் அதற்கு இணங்குமோ? அது பொங்கிக் கரை வழிந்து பாய்கிறது.

'' என் ஏகதனம் தாங்கள், ஜீவனும் தாங்கள்
என் போகமும் மோட்சமும் இதுவே

என் ஈசா, நின் பதாம் புஜமே!
என் கதி, விட்டுப் போகேன், நான் இதை!''

அந்நிலையில் திவாகரன் எப்படி அவளை விட்டுப் போகமுடியும்? அவளுடைய இதய வேதனை தொடர்கிறது. அவனுக்குத் தெரிந்த தத்துவங்களையெல்லாம் எடுத்துச் சொல்லித் திவாகரன் அவளுக்குப் புத்திமதி சொல்கிறான்.

'' பாவஞுங்கி, உனதன்பை நான் மெச்சினேன்
பாவனமாம் உனதன்பைச் சிதா சவங்களில்
பூப் போல், அனித்ய அசுபங்களிற் செலுத்திப்
பாவியாகிப் பலன் என்ன '' என்றான்.

'' ஸ்நேகம் தான் அகில ஸாரம், வாழ்வில்
ஸ்நேகம் ஒன்றே சத்தியம்
ஸ்நேகம் ஒன்றே புவனத்தின் மூலம்
அதற்கே நான் துறவு பூண்டேன்.''

இனி, பேதை நளினி என்ன செய்வாள்! காதலன் இவ்வுலக இன்பங்களை உதறித் தள்ளிவிட்டான். காதலிக்கு அவனின்றி இவ்வுலகமே வேண்டாம். கதிரவன் ஏற்றாலும் ஏற்காவிடினும் தாமரை அவனுடையது தானே? வாழ்வில் அடைய முடியாததைச் சாவில் நளினி அடைகிறாள். அவள் தன்னுடலைத் திவாகரனின் கரங்களில் அடைக்கலமாக்கிவிட்டுத் தன் உயிரை விடுகிறாள். இந்த அசாதாரணமான ஐக்கியத்தைக் கவி பின் வருமாறு விவரிக்கிறார்.

'' அலையின்மேல் சாந்த அலை சேர்ந்ததுபோலே,
ஒலியின்மேல் ஒலியொன்று இழைந்ததுபோல,
ஒளியோடும் பேரொளி கலந்ததுபோலே,
உடலோடுடல் சேர்ந்து நின்றதுவே!''

அந்த மகோன்னத ஆனந்த முகூர்த்தத்தில் நளினி தன் இக வாழ்வின் தளைகளை அறுத்தெறிந்து தன் காதலனாகிய யோகியை விடப் பெரிய தியாகத்தைச் செய்கிறாள்.

சிலர் நளினியின் வாழ்க்கை சோகமயம் என்றும், அவள் வாழ்வு பாழாகிப் போயிற்று என்றும் சொல்கிறார்கள். ஆனால் நம் முடிவு காதலின் இயல்பும் லட்சியமும் என்னவென்று அவர்கள் நினைப்பதைப் பொறுத்திருக்கிறது. வெறும் உடலுறவு மட்டுமே அதன் லட்சியமானால் அது தோல்விதான். ஆனால் உடல் இன்பத்துக்கு மேலான மன உறவு அதன் லட்சியமானால் அது வெற்றியாகும். உடல் உறவுக்கு மேற்பட்ட காதலையும் சிருங்காரத்தையும் இதில் இணைத்துக் கோத்திருக்கிறார் குமாரன் ஆசான். சிருங்காரத்தை ஸம்போகம் என்றும் விப்ரலம்பம் என்றும் பிரித்திருக்கிறார்கள். இரண்டாம் நிலையான விப்ரலம்பத்தை அடைவதற்கு முன் பத்து இடைநிலைகள் உள்ளன. அவை பின்வருமாறு:

1. சக்ஷுப்ரீதி—கண்டதும் காதல்
2. மானஸாங்கம்—மனமொத்திருப்பது
3. ஸங்கல்பம்—கற்பனை
4. ஜாகாரம்—உறக்கமொழிதல்
5. கார்சியம்—உடல் வாடுதல்
6. விஷய வைமுக்யம்—ஒன்றும் வேண்டா நிலை
7. லஜ்ஜாநாசம்—வெட்கமின்மை
8. உன்மாதம்—பைத்தியம்.
9. மூர்ச்சை—உணர்விழப்பது.
10. மரணம்—சாவு.

விப்ரலம்பத்தை எப்போது வேண்டுமானாலும் ஸம்போகமாக மாற்றலாம். நளினியின் கதையில் அவள் மேற்சொன்ன எல்லா இடைநிலைகளையும் கடந்து சென்று விட்டாள். கதையின் தொடக்கத்திலேயே அவள் திவாகரனைக் காணும் போதே ஏழாம் இடைநிலையாகிய நாணழிவு வந்து விட்டதனால்தான், தன்னுடைய காதலை வெளிப்படையாகக் காட்டிக்கொள்ள அவளுக்கு வெட்கமில்லை. அதற்கு முன்புள்ள நிலைகள் காதலர்களின் உரையாடல் வழியாக நமக்குத் தெரிகின்றன. கடைசி மூன்று நிலைகளும் நம் கண்முன்பே நடக்கின்றன. மரணம் இரண்டு விதமாக உண்டாகலாம். ஒன்று நிராசையின் உச்ச நிலையிலும், மற்றொன்று இரண்டு உயிர்களும் ஒன்றாகும் ஸம்போகம் வழியாகவும். இதில் முதல் வகையால் ஏற்படுவதுதான் நளினியின் மரணம். சாதாரண மாந்தர்கள் அந்நிலைவரை போவதில்லை. ஆனால் கவிஞர் நளினியை அதுவரை அழைத்துச் செல்கிறார்.

'நளினி' ஆசானின் மனப் போராட்டத்துக்கு ஒரு விளக்கம் என்று கூறலாம். உடல் வலிமையுள்ள ஓர் இளைஞனுக்கு உள்ள எல்லா எண்ணங்களும் குமாரனுக்கு இருந்திருப்பது இயற்கையே. சமூக வாழ்க்கையில் குமாரன் ஆண் பெண்களுடன் மிகவும் நெருங்கிப் பழக நேர்ந்தது. அந்நிலையில் காதல் போன்ற உணர்ச்சிகள் எழுவது இயற்கை, எனினும் ஸத்குருவின் போதனையால் இவ்வுலகின் சிற்றின்பங்களை வெறுக்கும் மனப்பான்மையும் இருந்தது. இரண்டையும் குமாரன் உதறித்தள்ள முயன்றபோது 'நளினி' உலகுக்குக் காணிக்கையாகக் கிடைத்தாள்.

## லீலா

தமது கற்பனைக்கேற்றபடி காதலை நன்கு சித்திரிக்க முடியவில்லை என்ற ஒரு குறை ஆசானுக்கு இருந்தது. அதைத் தீர்ப்பதற்காக அவர் "லீலா" என்ற வேறு ஒரு காவியத்தையும் எழுதினார். நளினி வெளிவந்து மூன்றாண்டுகள் கழிந்தபின்பு தான் "லீலா"

வெளியிடப்பட்டது எனினும், ஆசான் அதைத் தம் மனத்தில் முன்பே உருவாக்கி வைத்திருந்தார் என்பது, 'லீலா'வுக்கு அவர் எழுதிய முகவுரையிலிருந்து தெரிகின்றது.

" நளினியை எழுதி முடிப்பதற்கு முன்பே இது போன்ற ஒரு சிறு காவியம் எழுத வேண்டியது அவசியம் என்று எனக்குத் தோன்றியது. ஏனெனில், நளினியும் கதாநாயகனும் ராஜ குணங்களைத் துறந்து ஸாத்வீக நிலையில் நிற்கும் புண்ணியாத்மாக்கள். ஸாத்வீக நிலையை அடைவதற்கு முன்புதான் பல நிலைகளில் மாந்தர்கள் வாழ்க்கையின் இன்பதுன்பங்களையும் உணர்ச்சிகளையும் அனுபவிக்கின்றனர்."

நளினியின் உயர்ந்த ஸாத்விக நிலையில் மாசு புகாமல் சாதாரணமான உடலுறவை அடிப்படையாகக் கொண்ட காதலை வர்ணிக்க முடியாது. கவிஞரே இரண்டு காவியங்களையும் மதிப்பிடுகையில், " நளினி மென்மையான மணமும் தெளிந்த நிறமும் உள்ள தாமரை மலர். லீலா நல்ல நெடியும் வர்ணப் பகட்டும் உள்ள சம்பகப் பூ" என்று குறிப்பிடுகிறார். ஒன்று ஐம்புலன்களை உருக்குகிறது. மற்றது மனத்தை யுருக்கிச் சிந்தனையைத் தூண்டுகிறது. நளினியின் எளிய கதை ஆசானின் சொந்தக் கற்பனை. 'லீலா' பிரசித்தி பெற்ற பாரசீகக் கவிஞர் நிஸாமி எழுதிய லைலா-மஜ்னூவின் தழுவல், ஸெண்ட்ரல் ஹிந்து காலேஜ் பத்திரிகையில் டாக்டர் ஆனந்த குமாரஸ்வாமி எழுதி யிருந்த ஒரு கட்டுரையை ஆசான் படிக்க நேர்ந்தது. மூலநூல் அவருக்குக் கிடைக்கவில்லை. ஆனால் கதையின் உள்ளுறை அவர் மனத்துக்குள் புகுந்து குடைந்துகொண்டிருந்தது. காதலின் ராஜஸ நிலையைப்பற்றி அவர் கொண்டிருந்த சிந்தனைகளை உருக்கி வார்ப்பதற்கு 'லீலா' உதவியது.

ஆசானின் லீலா, வட இந்தியாவில் உதயபுரி என்னும் நகரில் அர்த்தபாலகன் என்ற வணிகனின் மகள். அவனுடைய சுற்றுப் பிரயாணங்களின்போது அவளுக்கு வேறு ஒரு வணிகனின் மகனை அர்த்தபாலகன் மணமுடிக்க நிச்சயம் செய்கிறான். அவளோ தன் இளமைப் பருவ நண்பன் மதனனை விரும்புகிறாள். அவள் தன் கணவனுடன் வாழ்ந்தபோதிலும் அவள் மனம் மதனனை மறக்க வில்லை. போலி மண வாழ்வை விரும்பாதவன் போல அவள் கணவன் விரைவில் இறந்துவிடுகிறான். பிணைப்பிலிருந்து விடுபட்ட லீலா உதயபுரிக்கு ஓடிவரும்போது, மதனன் மனமுடைந்து விந்தியமலைக் காடுகளில் அலைந்து திரிகிறான். லீலாவின் பெற்றோர் காலகதியடைந்ததால் அவள் தன் தாதியுடன் மதனனைத் தேடிப் புறப்படுகிறாள். அதற்குள் அவன் மனக்குழப்பம் முற்றிப் பைத்தி யமாகி விடுகிறான். காதலியின் எதிர்பாராத வருகையும் காட்சியும் அவனுடைய உணர்ச்சிகளை உச்ச நிலைக்குக் கொண்டு போய்

விடுகின்றன. உணர்ச்சிக் கொந்தளிப்பில் அவன் ரேவா நதியின் புனலில் குதித்து விடுகிறன். லீலாவுக்கும் அதே நதியின் மடியன்றி வேறு புகலிடம் உண்டோ?

நளினியைப் போலவே லீலாவும் மூன்று காட்சிகள் உள்ள ஓரங்க நாடகம். தாதி மாதவி உணர்வற்றுக் கிடக்கும் தன் தலைவியை எழுப்பும் தருணத்தில் முதல் அங்கத்தின் முதற் பாட்டு அடி தொடங்குகிறது.

"பிரணய பரவசே, சுபம் நினக்கு,
உணருக, உண்டொரு திக்கில் நின்பிரியன்
குணபதி, நெடுமோகன நித்திரை விட்டு
உணருக; நான் ஸகி, உன் மாதவி."

இவ்வாறு காவியம் நாடகப் பண்புடன் தொடங்குகிறது. பேச்சும் வர்ணனையுமாகக் கதை தொடர்கின்றது. மதனன், லீலா இவர்களுடைய காதலின் தீவிரமும் ஆழமும் இரண்டாம் காட்சியில் வெளிப்படுகிறது. லீலா, மாதவி இருவருடைய யாத்திரையும் அவர்கள் மதனனைக் காண்பதும் மூன்ரும் காட்சியில் கூறப்படுகின்றன. அவள் மதனனைக் காணுமுன்பே அவன் அருகில் இருக்கின்றன் என்ற உணர்ச்சி உண்டாகின்றது. சம்பகப் பூக்களின் மணம் அந்தக் காட்சியை உண்டாக்க ஒரு காரணம் என்று தோன்றுகிறது. ஆசானின் கதா பாத்திரங்கள், கண்களுக்குப் புலனுகாத உள்ளடங்கிய உலகிற்குள் அந்தராத்மாவுக்குள் இறங்கி விடுகின்றனர். மதனன் பழைய முறுக்கேறிய கட்டிளங் காளையல்ல. தளர்ந்து எலும்பும் தோலுமாகி இளமையிலே பழுத்த கிழவன். லீலா அவனைத் தழுவுகிறுள். அவனும் இன்பத்தை நுகர்கிறன். அவர்களும் நளினி—திவாகரர்களும் எத்தனை வேறுபட்டவர்கள்!

"மெய் தளர்ந்துணர்விழந்திடினும், அவன்
எய்தான் தன் கண்களால் தருணியை.
மெய்யழகில் மட்டுமே நிற்குமோ
உண்மைக் காதல்? அவளும் தன்
மெய்யால் அவனுடல் தாங்கினுள்
அய்யா வென்றுருகி, அன்பொடு
கண்ணீர் சுரந்தாள்.

ஆசானின் மற்ற பல காவியங்களையும் போல, லீலாவும் கைகூடாத காதல்தான். எல்லாக் கதவுகளும் அடைக்கப் பட்டிருக்கின்றவே? என்ன செய்வது? அந்த மன வேதனையை கவிஞர் மிக அழகாக வர்ணித்திருக்கிறர்.

"நினைந்தவெல்லாம் நடப்பதுமில்லை
ஆசைக்கோர் அளவுமில்லை வாழ்க்கை
விசை தீர்ந்த கருவி போன்றது.
ஈசன் நினைப்பதை யாரே அறிவார்?
மோசமாம் மனித வாழ்வு.

லீலாவின் அனுபவமாகிய இந்த ஏமாற்றம் கவிஞரின் வாழ்க்கையில் எத்தனையோ முறை திரும்பத் திரும்ப வந்திருக்க வேண்டும். காதல் உணர்ச்சியைக் கட்டுப்படுத்த இயலாது என்பதை அவர் அறிந்திருக்க வேண்டும். அடக்க அடக்க அது மேலும் அதிகமான சக்தியுடன் தளிர்க்கும். ஆசானைச் சுற்றி வாழ்ந்தவர்களுக்குக் காதலை அடக்கி உன்னதமான உணர்வாக மாற்றும் இயல்பு தெரிந்திருக்காது. அதனால் உடலுறவை ஒட்டிய காதலை எப்படி மன நிறைவாக மாற்றுவது, என்று வலியுறுத்திச் சொல்ல வேண்டிய அவசியம் அவருக்கு ஏற்பட்டது. 'நளினி'யில் காதலின் மேன்மையையும் அதன் கடினமான இயல்பையும் காண்கிறோம். 'லீலா'வில் அதிலும் தாழ்வானதும் நடைமுறை வாழ்க்கையில் காண்பதுமாகிய நிலை இருக்கிறது. இவையிரண்டினாலும் விமர்சகர்களால் தமக்களிக்கப்பட்ட 'ஸ்நேககாயகன்' (காதற் கவிஞன்) என்ற பட்டத்திற்கு ஏற்றவராகிறார் ஆசான்.

நளினியைப் போலவே லீலாவும் உதிர்ந்த மலர்தான். ஆனால் இதில் இகலோக வாழ்வின் முடிவு அதைக் காட்டிலும் சிறந்த பரலோகப் பேரின்பத்துக்கு வழி காட்டுகிறது. ஆத்மா அழிவற்றது என்று குமாரன் ஆசான் சொல்கிறார். ஹாரி எமர்ஸன் பாஸ்டிக் என்ற அமெரிக்க ஞானி சொல்வது போல, "நான் பெறவேண்டும் என்று ஏங்குவதனால் அமரத்துவம் என்பது உண்டு என்று கூறவில்லை. அது இல்லையென்றால் இவ்வுலகில் நிராசையால் நைந்த மனித உள்ளத்திற்கு வேறு போக்கிடமே கிடையாது போய்விடும். தத்துவ ஞானம் என்பது கவைக்குதவாதது என்று ஆகிவிடும்."

எதிர்பாராத உள்ளமுருக்கும் பிரிவுக்குக் காட்சியாக நிற்கும் மாதவி, அழுதழுது முடிவில் குழந்தை போல உறங்கிவிடுகிறாள். தேஜோமயமான இரு அமர தம்பதிகள் அவளை எழுப்பி ஆறுதல் அளிக்கின்றனர்.

# 8. மனையும் மனைவியும்

1920ம் ஆண்டு ஸ்ரீ நாராயண தர்ம பரிபாலன யோகத்தின் காரியதரிசியாகப் பதவியேற்ற பின் ஆசான் கருமமே கண்ணாக இருந்தார். ஸ்ரீ நாராயண குருசுவாமிகளின் அருள் நிழலில் அவர் எப்போதும் இருந்தபோதிலும், எல்லா விதத்திலும் அவர் சுவாமி

களுக்கு அடிமையாக இருந்தார் என்று சொல்ல முடியாது. ஆசானின் மனோதிடம் அத்தனை எளிதில் அற்றுப் போவதல்ல, இல்லறத்தைப்பற்றி அதிகம் நினைத்துப் பாராத ஆசான் நாற்பத்தைந்து வயதிலும் பிரம்மசாரியாகவே இருந்தார். எல்லாரும் அவர் அப்படியேதான் இருக்கப் போகிறார் என்று நினைத்தார்கள். ''சின்னசுவாமி'' என்ற பட்டப் பெயரும் நிலைத்துவிட்டது. ஆனால் ஆசான் மனம் எப்படி இயங்குகிறது என்று அறிந்தவர்கள் சிலரே. அவர் தம் உணர்ச்சிகளை வெளிப்படையாகக் காட்ட மாட்டார். அவருடைய நாட் குறிப்புகளில்கூடத் தம் மனத்தை வெளிப்படுத்தியிருக்கும் இடங்கள் மிகக் குறைவு. 1911ம் வருடம் அவருடைய தாயார் இறந்துபோனார்கள். அவர் உடனே ஓடி வந்து அழுது துடிக்கவில்லை. ஆனால் சில நாட்கள் கழித்து எழுதிய ஓர் இரங்கற்பாவில் தமது துக்கத்தைக் கவிதையாக வெளியிட்டார். உறவினர்களோடு அவர் அதிகம் ஒப்புக்கொண்டதேயில்லை. எல்லோரும் அவர் ஒரு துறவியென்றே கருதினார்கள்.

ஆசானின் உள்ளத்தில் இளமை முதலே இல்லறமும் துறவறமும் மாறி மாறி ஆதிக்கம் செலுத்தியிருக்க வேண்டும். முடிவில் இல்லறம் வென்றது. '' வீணபூவு '', '' நளினி '', '' லீலா '' என்ற காவியங்கள் இந்த மாறுதலைப் பிரதிபலிக்கின்றன. திருவனந்தபுரத்தில் மற்ற நண்பர்களுடன் வாழும்போது அவர்களுடைய அன்பும் ஆதரவும் அவர் மனத்தை நெகிழ்த்தித் துறவு எண்ணத்தைப் படிப்படியாக அகலும்படி செய்திருக்கலாம். சுற்றுலாக்கள் அதிகமாக இருந்தபோதிலும், திருவனந்தபுரத்தில் வசிக்கும்போது அவருடைய நண்பர்களாகிய டாக்டர் பப்பு, உறவினர்கள் முதலியோரின் வீடுகளில், அவர்களில் ஒருவன் என்ற உரிமையுடன் செல்வதற்கும் எல்லோருடனும் சரஸமாக வேறுபாடின்றிப் பழகுவதற்கும் ஆசானுக்கு வாய்ப்புக் கிடைத்தது. அன்று டாக்டர் பப்புவின் சகோதரன் பி. மாதவன் வைத்யன் புகழ்பெற்ற ஆயுர்வேத அறிஞராக இருந்தார். பதினான்கு ஆண்டுகள் அந்த வீட்டில் ஒருவராகவே ஆசான் பழகினார். அதுபோல டாக்டர் பப்புவின் சிற்றப்பன் குமாரன் ரைட்டருடைய வீட்டிலும் ஆசான் சர்வ சுதந்திரமாகப் பழகிவந்தார். குமாரு ரைட்டர் யோகத்தின் உபதலைவராகவும் கணக்குத் தணிக்கையாளராகவும் சிலமுறை பணியாற்றினார்.

நாட்கள் செல்லச் செல்லக் குமாரு ரைட்டரின் குடும்பத்தோடு ஆசானுக்கு இருந்த உறவு முறுகி வளர்ந்தது. குமாரு ரைட்டரின் மனைவி இலக்கியத்திலும் சங்கீதத்திலும் பற்றுள்ளவள். அவ் வீட்டில் எல்லோருமே கவிஞரின் கவிதையில் மயங்கியவர்கள். விருந்தாளி மாப்பிள்ளையாக மாறிவிடுவார் என்று யாரும் நினைக்கக்கூட இல்லை. ஆனால் அதுதான் நடந்தது. நாற்பத்தைந்தாம்

வயதில் குமாரன் ஆசான் குமாரு ரைட்டரின் மகளைத் திருமணம் செய்து கொண்டார். அந்தப் பெண் குமாரன் ஆசான் கல்கத்தா விலிருந்து திரும்பி வந்த அன்று பிறந்தவள்! காமனின் அம்புகள் அதிசயமானவைதாம். காவியுடுத்த சந்நியாசிகள்கூட அவற்றுக் குத் தப்ப முடியாதே? அப்படியிருக்க, காதலைப் பற்றிக் கவிதை புனையும் கவிகள் மலரம்பை எப்படி எதிர்க்க முடியும்?

குமாருரைட்டரின் மகள் பானுமதி அன்றைய வழக்கப்படி வயது பதினொன்று ஆன பிறகு பள்ளிபடிப்பை நிறுத்திவிட்டாள். பத்தொன்பது வயதாகிய பானுமதியின் தமக்கை திருமணம் நடந்த பின் திடீரென்று இறந்துபோனதனால், பானுமதியின் தாய்க்குத் துக்கம் அதிகரித்து மனம் பேதலித்துப் போயிற்று. வீட்டுப் பொறுப்புகள் எல்லாம் பானுமதியிடம் வந்து சேர்ந்தன. மகளுடைய படிப்பு நின்றுபோனாலும் சமஸ்கிருதமும் ஆங்கிலமும் தொடர்ந்து படிக்க ஏற்பாடு செய்ய வேண்டுமென்று குமாரு ரைட்டருக்குத் தோன்றியது. சமயம் கிடைக்கும் போதெல்லாம் சொல்லித் தருகிறேன் என்று குமாரனும் ஒப்புக்கொண்டார். எல்லோருக்கும் இசைவான இந்த ஏற்பாட்டில் பானுமதி பெரு மிதம் கொண்டாள். புகழ்பெற்ற ஒரு கவிஞரைக் குருவாகப் பெறு வதற்கு எத்தனை பாக்கியம் செய்திருக்க வேண்டும்!

வருடங்கள் சில கழிந்தன. பானுமதி வளர்ந்து மங்கைப் பருவம் அடைந்தாள். அவளையறியாமலே அவளுக்கு குருவின்மேல் உள்ள வாஞ்சையும் பக்தியும் வளர ஆரம்பித்தன. "வேளை வரும் போது கொடிகளும் மரங்களும் யார்க்கும் காத்திராமல் பூக்குமே" என்று நம் கவிஞரே பாடியிருக்கிறார். மாலவி நாள் தோறும் ஆசிரியருக்குப் பூக்களைக் காணிக்கையாக அளிப்பதுண்டு. ஆசிரியரை ஒரு நாள் காணவிட்டால் மாணவிக்கு ஏதோ போன்றிருக்கும். பானுமதி அம்மையார் தமது நாட்குறிப்பில் எழுதியுள்ளது போல, அவர் அன்பு சிற்றின்ப வேட்கையல்ல. நட்பு பக்தியாக மாறிய நிலையாகும். அவள் இளம் பெண். அவளுடைய நிலையை நாம் எளிதில் அறிந்து கொள்ளலாம். ஆனால் நாற்பத்தைந்து வயதாகிய நம் கவிஞரின் நிலை என்ன? அவர் ஒரு பெரும் இயக்கத்தின் பொறுப்பு வாய்ந்த செயலாளர். தம் நாட்டுக்கும் குலத்துக்கும் அவர் செய்ய வேண்டிய கடமைகள் எத்தனையோ உண்டு. ஸ்ரீ நாராயண குருவின் தவப்புதல்வர் என்று பெயரெடுத்தவர். அப்படியானால் அவர் ஒவ்வோர் அடியையும் யோசித்து எடுத்து வைக்க வேண்டியவராயிற்றே? அவர் அப்படிச் செய்தாரா?

வேலை மிகுதியால் இரவு நேரங்களில் மட்டுமே பானுமதிக்குப் பாடம் சொல்லிக் கொடுக்க முடிந்தது. ஒரு நாள் கனத்த மழை பெய்ததால் அங்கேயே உண்ணவும் உறங்கவும் நேர்ந்தது.

அங்கேயே ஜாகை மாற்றிக்கொண்டால் நலமாக இருக்குமே என்று எல்லாரும் சொன்னார்கள். அதுவும் சரியான யோசனை என்று தான் தோன்றியது. அவர் பாடம் சொல்லிக் கொடுக்கப் பணம் ஏதும் வாங்க விரும்பவில்லை. அச்சமயம் இரண்டு ஜெர்மன் அறிஞர்களுக்குப் பாடம் சொல்லிக் கொடுத்து மாதம் 40 ரூபாய் ஊதியமாகப் பெற்றுவந்தார். அவர்களுடைய பாடம் முடிந்தபின் பானுமதிக்குப் பாடம் கற்பிக்க வேண்டும். பானுமதியின் வீட்டிலேயே உணவும் உறக்கமும் கொள்ளலாம். குருவின் காரியங்களைச் சரிவரக் கவனிக்கவேண்டிய பொறுப்பும் மாணவிக்கு இருந்தது.

ஆசான் மனோ திடத்திலும், ஒழுக்கத்திலும் ஒருபோதும் குறைந்த மனிதரல்ல அவர். நடையில் தவறியதேயில்லை. ஒவ்வோரு அடியும் ஆலோசித்த பிறகே வைப்பார். முன்வைத்த காலைப் பின்வைத்ததும் இல்லை. அவர் பானுமதியின் மேல் காதல் கொண்டிருந்தார் என்பதில் சந்தேகமில்லை. அவளுடைய பக்தியும் பணிவிடையும் ஒரு மாணவிக்கு ஆசிரியரின் பேரில் இருக்கக்கூடிய அன்புக்கும் ஆதரவுக்கும் மேற்பட்டவை என்று அவருக்குத் தெரியும். தமக்குத் தெரிந்த பெண்பாலாரில் யாரும் பானுமதியைப் போலத் தம்முடன் வாழ்க்கையில் இணைந்து சேர முடியாது; பானுமதியைத் திருமணம் செய்து கொண்டால் இருவரிடையே உள்ள அன்பு இணைப்புப் பூரணமாகும்; வாழ்க்கையின் குறிக்கோளை அடையலாம், என்பது அவருக்குத் தெரிந்திருந்தது. அவர் மணவினை, தெளிந்த சிந்தனைக்குபிறகு ஏற்பட்ட முடிவு. கெடுபிடிக்குட்பட்டு உணர்ச்சி வசப்பட்டுச் செய்த காரியமல்ல.

ஊதிவிட்ட பலூன் என்றாவது வெடிக்கும். அது எப்போது என்பது தான் தெரியாது. 1917ல் ஸ்ரீ நாராயண குருவின் பிறந்த நாளை விமரிசையாகக் கொண்டாடினார்கள். ஆசான் விழாவிற் கலந்துகொள்வதற்காக விடியற்காலையிலேயே மூன்றரை மணிக்கு எழுந்து விட்டார். புறக்கடையில் பல் தேய்த்துக் கொண்டிருந்த போது பானுமதி தண்ணீர் கொண்டு வந்து கொடுத்தாள். அவ்வேளையில் ஆசான் தம் கரங்களை அவள் சிர மேல் வைத்து ஆசீர்வாதம் செய்தார். அந்தக் கைப்பட்ட மாத்திரத்தில் பானுமதி தன் ஆசிரியரின் உள்ளக்கிடக்கையைத் தெரிந்து கொண்டாள். ஆசானும் பானுமதியும் காதலினால் ஒரே நிலையை எய்தினார்கள்.

அவர்கள் காதலைப் பற்றிய விவரங்கள் பானுமதியம்மையாரின் வாழ்க்கைக் குறிப்புகள் வாயிலாக நமக்குத் தெரிகின்றன. ஒரு நாள் பாடங்கள் நடந்தபின் ஆசான் பானுமதிக்குத் தம் 'கபோத புஷ்பம்' என்ற கவிதையைப் பாடிக் காண்பித்தார். பிறகு சட்டைக்குள்ளிருந்து ஓர் உதிர்ந்த பூவை எடுத்து அவளிடம் கொடுத்தார். அதன் நறுமணத்தை பல வருடங்கள் கழிந்த பின்பும் பானுமதியால் மறக்க முடியவில்லை. உதிர்ந்த பூவின் கவிஞர் தம்

காதலிக்கும் ஓர் உதிர்ந்த பூவை அன்பாக அளிப்பது இயல்பு தானே?

ஆசிரியனும் மாணவியும் காதலர்களாக மாறிவிட்டதை முதலில் உணர்ந்தவள் பானுமதியின் தாய். அவள் தன் மகளுக்கு அறிவுரை புகட்டினாள். கேட்பார் யார்? காலக்கிரமத்தில் குமாரு ரைட்டருக்கும் மற்ற உறவினர்களுக்கும் அது தெரிய வந்தது. அனேகருக்கு அதில் விருப்பமில்லை. பலர் பலவிதமாகப் பேசிக்கொண்டார்கள். ஆசான் திருவனந்தபுரத்தில் ஒரு சிறிய வீட்டை வாங்கி அங்கே ஜாகை மாற்றிக்கொண்டார். நண்பர் ஐயப்பன் என்பவரும் உடன் இருந்தார். விரைவில் திருமணத்துக்கு வேண்டிய பெற்றோர் அனுமதி போன்ற சடங்குகள் நடைபெற்றன. எதிர்ப்பும் அல்லல்களும் இருந்தபோதிலும் திருமணம் நடைபெற்றது. ஆசானைப் போன்ற புகழ்பெற்ற பெரிய மனிதர் எப்படிப் பதினேழு வயதே உள்ள இளம் பெண்ணைக் கைப் பிடித்தாரென்பது சிலருக்குப் புரியவேயில்லை.

தம் மனத்திற்குள் திட நிச்சயம் செய்திருந்த போதிலும் ஆசான் ஸ்ரீ நாராயண குருவின் ஆசியை விழைந்தார். அவரை நேரிலேயே சென்று காண்பதற்குப் பதிலாக ஒரு சம்ஸ்கிருத சுலோகத்தை இயற்றி அதன் வாயிலாகத் தம் விண்ணப்பத்தைச் சமர்ப்பித்தார். அதைப் பற்றி அவருடைய நாட்குறிப்பில் ஒரு வரி மட்டும் எழுதப்பட்டிருக்கிறது. ''இன்று என் திருமணத்துக்கு அனுமதி கோரிச் சுவாமிக்கு ஒரு சம்ஸ்கிருத சுலோகம் எழுதியனுப்பினேன். 14-12-1917.'' அதைப்போல வேறு ஒரு நாள்: ''இன்று நான் ஸ்ரீ குமாருவுடன் என் விவாகத்தைப்பற்றிப் பேசினேன். 7-12-1917.''

சுவாமிகளுக்கு எழுதியபோது முன்பே அனுமதி கேட்காததற்கு மன்னிப்பும் கோரியிருந்தார். சுவாமிகளுக்கு அதை இரு முறை வாசித்துக் காட்டினார்கள். அவர் என்ன சொல்வார் என்று கேட்க எல்லாரும் ஆவலாக இருந்தனர். அவர் வாய் திறக்கவேயில்லை. ஒரு வாரம் கழிந்த பின் மீண்டும் ஆசி கோரி ஒரு தந்தி வந்தது. ஒரு சிஷ்யர் கேட்டார்.

''நாம் அனுமதி கொடுத்து ஒரு தந்தியடிக்க வேண்டாமா?''

''ஏன்? கல்யாணம் நிச்சயமான பிறகு நம்முடைய அனுமதி எதற்கு?''

''அவர் ஆசி கோரியிருக்கிறாரே?''

''ஆசீர்வாதம் எப்போதும் உண்டு. அதை அனுப்ப வேண்டுமா என்ன?''

கவிதைக்கும் தந்திக்கும் பதில் இல்லை. நாராயண குருவுக்குச் சந்தோஷம் இல்லை என்பது தெளிவு. ஆனால் திருமணத்திற்குக் குறுக்கிடவுமில்லை. 1917-ல் விவாகம் எளிமையாக நடைபெற்றது.

மணமக்கள் மாலை மாற்றிக் கொண்டனர். திருவாங்கூர் ஸெக்ரடேரியட்டில் வேலை பார்த்து வந்த ஸ்ரீ கிருஷ்ணய்யர் என்பவர் புரோகிதம் செய்து வைத்தார். மணமக்கள் புதிய வீட்டில் புதுக்குடித்தனம் ஆரம்பித்தார்கள். ஆசிரியர் பாடங்களைத் தொடர்ந்து சொல்லிக்கொடுத்தார். சம்ஸ்கிருதம் மட்டுமல்ல. சமையல், வீட்டுப் பாராமரிப்பு முதலிய கலைகளும் கூடத்தான். பானுமதி அம்மையார் தம் கணவர் தமக்கு எத்தனையோ விஷயங்களில் குரு என்று எழுதியிருக்கிறார்.

ஆசான் தம் வாழ்க்கையில் எத்தனையோ கண்டனங்களை எதிர்ப்பட நேர்ந்தது. அவரை மனிதன், கவிஞன், தலைவன் என்ற எல்லா நிலைகளிலும் குற்றம் சாட்டித் தூற்றியவர்கள் எத்தனையோ பேர். அவர்களில் அநேகர் அவருடைய குலத்தைச் சேர்ந்தவர்களே. யோகம் ஒரு மாபெரும் இயக்கமாக வளர்ந்தது. அதன் செயலாளர் பொறுப்பு மிக்கவர். அந்நிலையில் திருவாங்கூர் பிரஜா ஸபை போன்றவற்றில் அங்கத்தினராகவும் செயற்படவேண்டும். திவான் அவர்களோடு நேரிலே பேசிக் காரியங்கள் நடைபெறுவதற்கான முயற்சிகள் செய்யவேண்டும். இந்தப் பொறுப்புகளையும் வாய்ப்புகளையும் ஆசான் தம் குலத்தவர்களின் மேன்மைக்காகவே உபயோகித்தார். இருப்பினும் அசூயை யாரை விட்டது! சிலர் ஆசானின் முகத்தில் கரி தீற்ற முயன்றார்கள். ஆசான் சொந்தக் காரியங்களுக்குச் செயலாளர் பதவியை துர்வினியோகம் செய்கின்றாரென்றும் சொன்னார்கள். சொந்த மாணவியை மனைவியாக்கிக் கொண்ட செயல் அவர்கள் பழிப்பதற்கு மற்றொரு காரணமாக அமைந்தது.

தன் நெருங்கிய நண்பர்கள் என்று கருதிய சிலரிடமிருந்து மேற்கூறிய அபவாதங்கள் வந்தபோது ஆசான் மிகவும் மனம் நொந்தார். அவர் மனக்கிலேசங்களை 'கிராம விருட்சத்திலே குயில்' (1919) என்ற கவிதை வாயிலாக வெளியிட்டிருக்கிறார். குயில் கவிஞரையே குறிக்கும். மரம் ஸ்ரீ நாராயண தர்மபரிபாலன யோகம் ஆகும். மரத்தின் சொந்தக்காரர் யோகி ஸ்ரீ நாராயண குரு சுவாமிகள். இந்த உவமைகளின் வழியாக ஆசான் தம் வருத்தத்தையும் ஏமாற்றத்தையும் தெரிவிக்கிறார். அழகிய அச்சிறு கவிதையின் வாயிலாக நாம் கவிஞரின் மனநிலையை ஒருவாறு உணரலாம்.

" அன்பினால் தானே ஒழுகிடும் அமுதம் கலந்த
நின்பாட்டு நித்தியமும் கேட்டுத் தானே தளிர்த்துக்
கொம்பை ஓங்கி வீசி வானை அளந்திடும்
மாமரந்தான்........"

கவிதையில் குயில் கிராமத்துக்கு நெடுநாட்களாகச் செய்து வந்த சேவைகள் விவரிக்கப்படுகின்றன. பகலில் எதிர்த்த காக்கைகளும்

இரவில் எதிர்த்த வௌவால்களும், குயில் இருந்ததனுல் மரத்துக்குக் கேடு வரும்படி செய்யமுடியவில்லை. குயில் எல்லா எதிர்ப்பையும் ஏற்றுத் தன் கடமையை தீரமாகச் செய்து முடித்தது.

1902ல் நிறுவிய ஸ்ரீ நாராயண தர்ம பரிபாலன யோகத்திற்கு 1919 வரை குமாரன் ஆசானே பொதுச் செயலாளராக இருந்தார். அதன் முதல் சட்டப்படி ஆண்டுதோறும் பொதுச் செயலாளர் பதவிக்குத் தேர்தல் நடத்தவேண்டும். அன்று யாருக்கும் அந்தப் பதவியும் அதன் பொறுப்பும் வேண்டாம் என்றிருந்தது. நாட்கள் செல்லச் செல்ல அது நமக்கு வேண்டும் என்று சிலருக்குத் தோன்றியபோதிலும், அவர்களுக்குக் குமாரனை யொத்த திறமையில்லாத படியால், ஆசானே வருடந்தோறும் தேர்ந்தெடுக்கப்பட்டார். அசூயைக்கும் பொறுமையின்மைக்கும் வேறு என்ன காரணம் வேண்டும்? ஆசானுக்கும் எதிரிகள் அதிகமானுர்கள். 1915 முதலே ஒரு மாற்றம் வேண்டும் என்று ஆசான் விரும்பினுர். அப்போது அவர் புகழ் கேரளத்துக்கு வெளியிலும் பரவியிருந்தது. பதினுரும் வருட இறுதிக் கூட்டத்தில் தமக்கு விடுதலையளிக்க வேண்டும் என்று அவர் தெரிவித்தார். வெகு பாடுபட்டு பிரதிநிதிகள் அதற்குச் சம்மதிக்கும்படி குமாரன் ஏற்பாடு செய்தார்.

அதற்கு முன்பே ஸ்ரீ நாராயண குரு சுவாமிகள், யோகத்தின் நடவடிக்கைகளிலிருந்து சற்று விலகியிருந்தார். அதைப் பற்றிக் குமாரன் பின்வருமாறு தம் கவிதையில் எழுதியிருக்கிறுர்:

"போகலாமிங்கிருந்து மகானுகிய தாங்கள்
சோகம் வேண்டாம் இம் மாமரத்தைத் குறித்து.
ஏகாந்த போதத்தை நாடும் மாபெரும்
போகிகள் எதிலும் பற்றிலாதவராம்!"

ஆசான் யோகத்துடன் உள்ள தொடர்பை விட்டுவிட்ட போதிலும், அவர்களால் அவரை அப்படியே புறக்கணிக்க முடியவில்லை. பதினேழாம் வருட விழாவுக்கு அவரையே தலைவராகத் தேர்ந்தெடுத்தார்கள். பதினுறு வருடங்களுக்கு மேல் ஓய்வொழிவின்றி ஆசான் யோகத்துக்காக உழைத்தார். 1917ல் அவருடைய மாத ஊதியம் வெறும் முப்பது ரூபாய் மட்டும் என்று தெரிந்த போது, அதை ஐம்பது ரூபாயாக உயர்த்த ஒரு முயற்சி நடந்தது. அதற்கும் எதிர்ப்பு உண்டாயிற்று என்று காணும்போது அவர் பணியாற்றிய சூழ்நிலை எத்தனை இடர்கள் நிறைந்தது என்று தெரிகிறது. ஆகவே அவர் தம் மனதுக்கு இசைந்த ஒரு மனைவியுடன் இடரற்ற இன்ப வாழ்வு நடத்தவும், மக்களின் புகலுக்கும் அப்பாற்பட்டு, தம் கவிதா யக்ஞத்தில் ஈடுபடவும் விழைந்ததில் அதிசயமில்லை.

# 9. பிரரோதனமும் ஸீதையும்

குமாரன் ஆசானின் வாழ்க்கையில் திருமணம் ஒரு பெரிய திருப்பம். 'குயில்' 1918-ல் திருமணம் நடந்த ஒரு வருடத்துக்குள் எழுதப்பட்டது. 1919-ல் யோகத்தின் செயலாளர் பதவியிலிருந்து அவர் விலகிஞர். அவர் 'ப்ரரோதனம்', 'ஸீதா', என்ற இரு மகாகாவியங்களே இயற்றிக் கேரள நாட்டிற்குக் காணிக்கை வைத்தார்.

## ப்ரரோதனம்

ஆசானின் மகாகாவியங்களிலெல்லாம் இரங்கற்பாக்களின் இயல்பு செவ்வனே காணப்படுகிறது என்பதை நாம் முன்பே கண்டோம். 'ப்ரரோதனம்' அவர் எழுதிய முழுமையான இரங்கற்பாவாகும். ப்ரரோதனம் என்ற வடசொல்லுக்கு மிகுதியான அழுகை என்று பொருள். இப்பாட்டின் தலைவர் பேரறிஞரும், இலக்கணப்புலியும் கவிச்ரேஷ்டரும் ஆகிய காலஞ் சென்ற பேராசிரியர் ஏ. ஆர். ராஜராஜவர்மா அவர்கள் (1863-1918). அவர் பழைய பண்புகளேயும் மரபுகளேயும் ஆதரித்தவர். அதே சமயத்தில் நவீன நோக்கும் உடையவராக இருந்தார். அவர் ஆசானே நன்கு அறிந்து பழகும் நண்பரும், எப்போதும் உதவும் வள்ளலுமாக இருந்தார். யாரும் நன்கறியாத கவியென்ற நிலேயில் ஆசான் இருந்தபோது அவர் ஆசானின் முதற் பெருங்காவியமாகிய 'நளினி'க்கு ஒரு நல்ல முகவுரை எழுதிக் கொடுத்தார். நளினியின் வாயிலாக மலேயாள இலக்கியத்தில் உண்டான புதிய அதில் திருப்பத்தைப் பற்றிப் புகழ்ந்து விவரித்திருக்கிருர்.

அவரைப் போன்ற ஒரு கவிதிலகரிடமிருந்து கிடைக்கும் மதிப்புரை பெரிய உதவியும் ஊக்கமும் அளிப்பது. மேற்குலத்தாரிடமிருந்துதான் மேன்மையான இலக்கியம் தோன்றும் என்று திடமாக நம்பிவந்த அந்தக் காலத்தில், க்ஷத்திரிய வம்சத்திற் பிறந்த ராஜராஜவர்மா அதற்கொரு விலக்காக இருந்தார். அந்தச் சூழ்நிலேயில்தான் அவ்விரு கவிஞர்களும் தங்கள் நெருங்கிய நட்பை வளர்த்தார்கள். தமது மனக்கிடக்கையையும் லட்சியங்களேயும் நன்கு அறிந்த வேறு ஒரு நண்பர் உண்டென்று ஆசான் கருதி

யிருந்தால் அவர் ராஜராஜவர்மாவே. அதனுல் ராஜராஜவர்மா 1918-ல் இறந்தபொழுது, ஆசானுடைய துக்கம் பொறுக்கமுடியா மற்போயிற்று. நூலின் முகவுரையில் ஆசான் இதை விவரித்திருக்கிருர். "போன மிதுன மாதம் தொடங்கியபோது நான் வட திருவிதாங்கூரில் யாத்திரை செய்து கொண்டிருந்தேன். அப்போது இதயத்தைப் பிழியும் அந்த மரண வார்த்தையைக் கேட்க நேர்ந்தது. எதிர்பார்க்காததும் தாங்கவொண்ணுததுமாகிய ஒரு பேரிடியாக இருந்தது. இதயம் மரத்துப் போய்விட்டது என்றே சொல்லலாம். பல பத்திரிகை ஆசிரியர்கள் முறைப்படி என்னிடம் வந்து இரங்கற்பா எழுதவேண்டும் என்று கேட்டுக் கொண்டார்கள். எனக்கு அது மேலும் துன்பமாக இருந்தது. அக்ஷரம்கூட எழுதுவதற்கு என்னுல் முடியவில்லை......மனத்தின் துயர் காலக்கிரமத்தில் சிறிது குறைந்தது. திருமேனி*யைப் பற்றிய நினைவுகளும் சிந்தையும் என்னைத் துயரில் ஆழ்த்தின. கடைசியில் நான் ஓர் இரங்கற் கவிதை எழுதி என் இதய பாரத்தைக் குறைக்க நிச்சயித்தேன்."

ஸ்ரீ ராஜராஜவர்மாவின் சடலம் தழலுக்கிரையானபோது திருவிதாங்கூர், கொச்சி, மலபார் என்ற மூன்று தெய்வப் பெண்கள் அங்கு வந்து அழுவதாகக் கவிஞர் வர்ணித்திருக்கிருர். அவருடைய ஆன்மா வானுலகு செல்கையில் அங்கே பாஸன் காளிதாஸன் தாகூர் முதலியோர் அவரை வரவேற்கின்றனராம். கைரளிதேவியின் துயரை ஆற்றுவதற்குக் கலைமகளே அங்கு வருவதாகவும் கவிஞர் எழுதியிருக்கிருர். பிறகு இதெல்லாம் வெறும் கனவு மட்டுமன்றே என்றும் கூறுகிருர். பின்னர் வாழ்வு, சாவு இவை பற்றிய தத்துவ சிந்தனைகளும், அன்பு ஒன்றே இவ்வுலகில் நிலையானது, நிச்சயமானது என்ற முடிவும் தொடர்கின்றன. மற்றக் கவிதைகளைப் போலன்றி இதில் சில நவீன அணிகளும் கையாளப்பட்டிருக்கின்றன. கதாபுருஷனைப்பற்றிச் சொல்லும் இடங்களில் சிந்தையும் உணர்ச்சியும் கூடிக் கலந்துருகி வேறு எந்தச் சரம காவியத்திலும் காணப்படாத அளவுக்கு அழகாக அமைந்துள்ளன. சில பாட்டுகளைக் கீழே காணலாம்.

"உன் தளராத கற்பனையையும், மை உலராத பேனுவையும்
வாணியின் ஊழியத்துக்கே உதவினுய், பேரன்பன் நீ!
உன் ஸித்திகள் உனது நூல்கள், அவற்றின் வழியே
பாணினி போன்று உலகுக்கோர் ஆசிரியனுனுய் நீ!
உன் எதிரிகள் நாணித் தலைகுனிந்தார்!
உன் தாய் கைரளி தன் விடுதலையை நோக்கி நின்ருள்!"

---

* அந்தணர், க்ஷத்திரியர், முதலியோரைக் குறிப்பிடும்போது கேரளத்தில் அவர்களைத் திருமேனி என்று அழைப்பது பழக்கம்.

"கொடு வெயிலின் கிரணங்களே ! நீங்கள் தான்
இறுதியில் வரும் மரணத்துக்கஞ்சி என்றும் நடுங்கிச்
சூடேறும் உள்ளுணர்வின் கொழுந்துகளோ ?
ஓடிப் பாயும் காற்றே ! உனது ஓலந்தான்
வாடும் மனத்தின் நெட்டுயிர்ப்போ ?
கோடி நீர்த்துளிகள் நிறைந்த கார் முகிலே ! உன் மழை
சாடி மறைந்த முற்பிறவியின் கண்ணீரோ ?"

சாவு என்பது என்ன ? அது ஒரு பிறவியிலிருந்து மறுபிறவிக்குப்போகும் வழியில் இடையேயுள்ள தாற்காலிகமாகிய ஒரு நிலையா, அல்லது வாழ்வுக்கே ஒரு முடிவா ? வானகம், நரகம், மறு பிறவி, ஆத்மா, என்பவையெல்லாம் எத்தனை அளவுக்கு உண்மை ? வாழ்க்கையின் பொருள் என்ன ? காணாத இரகசியத்தைத் தேடி எத்தனை தூரம் போகமுடியும் ? இவ்வகைக் கேள்விகளுக்கெல்லாம் கவிஞர் விடைதேடுகிறார்.

"சொல்லுங்கள் !—
மரணமின்றேல் வாழ்வுக்கோர் சோபையுண்டோ ?
இரவின்றேல் பகலுமோர் முடிவிலாப் பாலைவனமாம் !
பகலோன் தாமரையின் புகழ்பாடி நடக்கட்டும் !
சிகையில் ஆம்பல் சூடி உறங்கட்டும் நிசாதேவி !"

ஆங்கில இலக்கியத்திற் காணும் எலிஜி என்ற இரங்கற்பா நடையை பெரும்பாலும் ஆசான் கையாண்டிருக்கிறார். கவிஞர் ஷெல்லியின் 'அடோனிஸ்' என்ற பாட்டு அவருக்கு நல்ல உதாரணமாகத் தோன்றியது. ஆனால் 'ப்ரரோதனம்' சொந்த முயற்சி. அது ஆழம் மிகுந்தது. தத்துவ சிந்தனையும் உணர்ச்சிக் கொந்தளிப்பும் ஒன்று சேர்ந்து உன்னதமான இரங்கற்பாவாக அமைந்துவிட்டன.

## ஸீதா

ஆசானின் கவிதைகள் விமர்சகர்களுக்கு நிறைய வேலை கொடுப்பவை. அவருடைய கவிதைகளில் மிகவும் ஆழ்ந்ததும் அதிகமான அளவில் விமர்சனத்துக்கு இலக்காகியதும் 'ஸீதை' என்னும் கவிதையேயாகும். அதன் முழுப்பெயர் 'சிந்தா விஷ்டையாய ஸீதா,' என்பதைத் தமிழில் 'உலக சிந்தனையில் முழுகிய சீதை' என்று மொழிபெயர்க்கலாம். (வால்மீகியின் ஆசிரமத்தில் வசித்துவரும் ஸீதாதேவி தன்னுடைய நிலையைப் பற்றி அலோசிப்பதும், பழைய நினைவுகளை மதிப்பிடுவதும் பற்றி எழுதிய கவிதை அது.) இராமாயணக்கதையின் முக்கியமான பல இடங்களை நமது முன்னே கொண்டுவந்து அதன் தலைவனையும் / தலைவியையும் வாசகர்களைக் கொண்டு மதிப்பீடு செய்வதற்குத்

துணிந்த முயற்சி இது. 1919-ம் ஆண்டில்தான் இது வெளிவந்தது எனினும், 'லீலா' எழுதி முடிந்தவுடனே கவிஞர் இந்தக் காவியத்தை எழுதத் தொடங்கினர். ஐந்து வருடங்களுக்கிடையே எண்பது செய்யுட்கள் மட்டும் எழுத முடிந்தது. மிகுந்த நூற்றுப் பன்னிரண்டு செய்யுட்களும் அதற்குப்பின் சில நாட்களுக்குள் எழுதப்பட்டவை. அதற்கு நடுவே கவிஞரின் திருமணமும், ஸ்ரீ நாராயண தர்ம பரிபாலன யோகத்தின் பொறுப்பிலிருந்து விலகும் நிகழ்ச்சியும் நடந்தன. யோகத்தின் செயலாளராக அவர் பணியாற்றியபோது அவர் வாழ்க்கை சஞ்சலமுள்ளதாக இருந்ததென்று நாம் அறிகிறோம்.

புகழ்பெற்ற ஓவியர் இராஜா ரவி வர்மா அவர்கள் வரைந்த ஸீதையின் படத்தைக்கவிஞர் அடிக்கடி உற்றுநோக்கிக் கொண்டே இருப்பாராம். அதிலிருந்துதான் அவருக்கு இந்நூலை எழுதும் உணர்வு பிறந்தது என்று தெரிகிறது. இராமாயணக்கதை எத்தனையோ மொழிகளில் பல கவிஞர்களுடைய காவியத்தின் பொருளாக அமைந்து உதவியிருக்கிறது. இந்திய மொழிகள் பலவற்றிலும் சீதாபிராட்டியைப் பற்றி எழுதியிருக்கிறார்கள். ஆனால் ஆசானின் உதிர்ந்த பூவைப்போல 'ஸீதை'யும் ஓர் இணையில்லாத கற்பனை. அனேகர் அதுவே ஆசானின் கவிதைகளில் சிறந்தது என்று கருதுகிறார்கள். இந்தப் பழங்கதையை ஆசான் எப்படிக் கையாண்டிருக்கிறார் என்று பார்ப்போம்.

வால்மீகி முனிவரின் கதை ஆடவர்கள் காணும் கோணத்திலிருந்து எழுதப்பட்டிருக்கிறதென்றால், ஆசானின் கதை பெண்கள் காணும் கோணத்திலிருந்து எழுதப்பட்டிருக்கிறது எனலாம். இங்கு ஆசான் ஸீதையென்ற பெண்ணின் வாழ்க்கையில் மிகவும் முக்கியமான ஒரு தருணத்தில் அவளுடைய நற்குணங்களையும் குறைகளையும் படம்பிடித்துக் காட்டியிருக்கிறார். ஸீதை இப்பூவுலகை விட்டுப் பிரிந்து போவதற்கு முந்திய நாளில் நடப்பதாகக் காவியம் எழுதப்பட்டிருக்கிறது. பன்னிரண்டு வருடங்களாக ஸீதை வால்மீகியின் ஆசிரமத்தில் வசித்து வருகிறாள். வால்மீகி அவளுடைய இரு புதல்வர்களையும் ராமனின் அரண்மனைக்குக் கூட்டிக்கொண்டு போயிருக்கிறார். அவர்கள் புதிதாக இயற்றப்பட்ட இராமாயண காவியத்தை அரசர் முன்பாகப் பாடுவார்கள். அதனால் அரசர் மனம் மாறலாம். தாம் செய்த தவறுக்காக வருந்தலாம். பரிகாரமாக ஏதாவது செய்யக்கூடும். அப்போது ஸீதை உணர்ச்சியினால் விளையும் பல சிக்கல்களைச் சமாளிக்க வேண்டிவரும். அன்று மாலை அவள் நதிக்கரையருகே உள்ள தோட்டத்தில் அமர்ந்து கொண்டு தன் வாழ்க்கையையும் தனக்கு நேரிட்ட அனுபவங்களையும் பற்றிச் சிந்திக்கிறாள். இதைவிட வேறு ஒரு நல்ல பொருத்தமான தருணம்

கதையை அமைக்கக் கிடைக்காது. ஆசான் அதைப் பயன்படுத்திக் கொள்கிறார்.

முதற் செய்யுளிலேயே வியக்கத்தக்க வகையில் சுருக்கமாகக் கதாநாயகியை நமக்கு அறிமுகப்படுத்தி விடுகிறார்.

" மக்கள் மாமுனியோடயோத்தியில்
சென்ற பின் ஒரு மாலை நேரத்தில்
மனச்சுமை நிறைந்த ஜானகி
சென்றமர்ந்தாள் மலர் முல்லைக் காவில் "

அந்தி மயங்கும் நேரம். எப்போது கதிரவன் சாய்ந்தான், நிலவு உயர்ந்தது என்று ஒன்றும் நோக்காமல் தன் எண்ணக்குவியல்களுக்குள் ஆழ்ந்து கிடக்கும் ஸீதை தன் சிந்தையே கதி என்றிருக்கிறாள். அவளுடைய வாழ்க்கையில் நடந்த உயர்வுக்கும் தாழ்வுக்கும் ஓர் அளவுண்டோ? அடுத்த சில பாக்கள் அந்நிலையை வர்ணிக்கின்றன. பட்டுப்பாய் விரித்ததுபோல் புல்வெளி; ஸீதை உட்கார்ந்திருக்கும் இடத்தில் வளர்ந்திருக்கும் வாகைமரம் பூத்துக் குலுங்குகிறது. புளகங்கள் தோன்றுவது போல் நீர்ப்பரப்பில் தோன்றும் ஆம்பற்கூட்டங்களுக்கிடையே மெதுவாக இழைந்து செல்கிறது தமஸா நதி. பதினொருவது செய்யுளில் ஸீதையின் துக்கத்தின் காரணம் வெளிப்படுகிறது.

" மாக்களின் புண்பட்ட யாக்கையின்
ரணம் விரைவில் ஆறும். மனத்தில்
மனிதனுக்கே உண்டு, என்றும் ஆறாத
மானத்தின் ரணம்!"

பன்னிரண்டாம் செய்யுளிலிருந்து ஸீதை தனக்குத்தானே பேசும் பேச்சுத்தொடங்குகிறது. பிரபல விமர்சகர் அழிக்கோடு சுகுமாரன் தமது விமர்சனத்தில் (இக்கவிதையை நான்கு பாகங்களாகப் பிரித்திருக்கிறார்; முதலாவது பழைய நினைவுகளை விளக்குவது, இரண்டாவது சூட்சுமமான கூரிய பரிசோதனை, மூன்றாவது பழி சுமத்தல், நான்காவது கற்பனை) பன்னிரண்டு முதல் நாற்பத்து நான்கு வரை உள்ள செய்யுட்கள் முதற் பிரிவைச் சேர்ந்தவை. நாற்பத்து ஐந்து முதல் ஐம்பத்து நான்காவது செய்யுள் வரை இரண்டாம் பிரிவைச் சேரும். அதனுடைய தீவிரம் படிப்படியாக உயர்ந்து கடைசியில் பழி சொல்லும் கட்டம் வரை போய் விடுகிறது. எண்பது முதல் நூற்றுமுப்பத்து மூன்று வரை இதன் இடம். ஆனால் கடைசியில் ஸீதை மீண்டும் அமைதியையும் ஞானத்தையும் அடைகிறாள்.

ஸீதை இராமனைப் பற்றிச் சொல்லக்கூடாத அல்லது நினைக்கவும் கூடாத பழிகளைச் சுமத்துவதன் மூலம், இந்தக் காவியத்தில் குமாரன் ஆசான் இராமனை இழிவுபடுத்தி விட்டார் என்று ஒரு சிலர் கூறுகிறார்கள். ஆசான் இராமனைச் சாட்சிக்கூண்டில் ஏற்றி

மிகவும் கடுமையான குறுக்கு விசாரணைக்கு இலக்காக்கி விட்டார் என்பது சரியே. ஆனால் அதனால் வால்மீகி ராமாயணத்தில் மிகவும் உயர்ந்தவனாகக் காட்டப் பெற்ற ராமன் ஆசானின் 'ஸீதை'யில் அதமனாகிவிட்டான் என்று சொன்னால் அது சரியாகாது. இராமன் ஒரு குற்றமும் இழைக்காத கடவுள் அல்ல. அவன் எல்லா மனிதர்களையும் போலப் பல பண்புகளும் சில குற்றங்களும் கலந்து இணைந்த ஆண் மகன். வால்மீகியின் இராமனும் ஆசானின் இராமனும் ஒருவரோ? கதா புருஷனை உருவகம் செய்யும்போது இயற்கையான மனித இயல்புகளே இராமனை மனிதருள் மாணிக்கமாக ஆக்குகின்றன. இராமயணக் கதைக்குச் சுவை கூட்டி அதைப் பெரிய இலக்கியமாக மாற்றுகின்றன.

ஆசானின் ஸீதை அப்பழுக்கற்றவள், பெருந்தன்மையுடையவள், மற்றவர்களின் நிலையைத் தெரிந்துகொள்ளும் இயல்புடையவள் எனினும் எல்லோரையும் போலக் குருதியும் தசையும் உள்ள உடம்பினள்தான். வால்மீகி அவளைப் பத்து வருடங்களுக்கு மேலாக ஒரு திரைக்குள் மறைத்து வைத்து விட்டார். ஆனால் ஆசான் அவளை மன்றத்துக்கு நடுவே நிறுத்தி அவளுடைய மனத்தில் உள்ளதைத் திறந்து பேச வைக்கிறார். அவள் தனக்குத்தானே பேசிக்கொள்வதால் சுதந்திரத்துடன் தன் உள்ளக் கிடக்கையை ஒளித்து வைக்காமல் காட்டுகிறாள். நாம் இதற்கு முன் பாராத முறையில் ஸீதையின் மனக் கொந்தளிப்பைக் காண்கிறோம். அவளுடைய நினைவோட்டத்திலுள்ள பார்வை எந்தப் பெண்ணுக்கும் இருக்கக்கூடிய பார்வைதான்.

சிலர் 'ஸீதையின் வாதங்கள் ஒன்றுக் கொன்று முரணாக இருக்கின்றன. வேளைக்கு வேளை அவளுடைய வாத முறைகள் மாறுகின்றன' என்றெல்லாம் சுட்டிக் காண்பித்திருக்கிறார்கள். ஸீதையின் மனநிலை மாறி மாறி வரும்போது சில வேளைகளில் அவள் பழி சுமத்துவது இயல்பே. ஆனால் நுட்பமாக ஆராய்ந்தால் அவை முரண்பாடுகள் அல்ல; ஒரு நிலையிலிருந்து வேறு ஒரு நிலைக்கு மனது பாயும்போது இயற்கையாக உண்டாகும் மாற்றங்களே அவை என்பது விளங்கும். இம்மாதிரி எழக்கூடிய சந்தேகங்களுக்குப் பாட்டிலே அங்கும் மிங்கும் பதில் சொல்லப் பட்டிருக்கிறது. ஸீதை பத்து வருடங்களுக்கும் மேலாகத் தவ மகளாக ஆசிரமத்தில் வாழ்ந்தபோதிலும், மாண்டுமடியும் வரை அவள் பெண் தானே? இராமன் ஒரே சமயத்தில் மனிதனாகவும் கணவனாகவும், அரசனாகவும் இருக்கிறான். அது போலவே ஸீதையும் ஒரு பெண், மனைவி, பிரஜையாக இருக்கிறாள். ஆசானின் ஸீதை தன்னுடைய வெவ்வேறு நிலைகளை நன்கு அறிவாள். அது போலவே ராமனின் பல்வேறு நிலைகளையும் அறிவாள். அடிக்கடி மாறும் அவள் மன நிலைகளையும் உணர்ச்சிகளையும் காணக்காணச்

சுவை உண்டாகும். அவளுடைய மனநிலைகளைக் கவிஞர் எப்படிப் புனைந்திருக்கிறார் என்று பார்ப்போம்.

எத்தனையோ வருடங்கள் கழிந்தாலும், இராமனைப் பற்றி நினைக்கும்போது தோன்றும் கனிவு இன்னும் மாறவில்லை எனினும், அது ஏதோ ஒரு பழைய நினைவு போலவே தோன்று கிறது.

'' கண நேரம் பிரியினும் என்னுள்ளம்
ரணமான நாட்கள் போய்விட்டதே! இன்றென்
தலைவனின் பாலுள்ள ஆர்வம்
மலைப்பாம்பு போல உறங்குகிறதே!''

தனக்குப் பைத்தியம் பிடித்து விடக்கூடாதா என்று ஏங்கின அப்பழங்காலத்துக் கஷ்ட தசைகளைப் பற்றி அவள் நினைத்துப் பார்க்கிறாள். பாவம் லக்ஷ்மணன்! அவள் மேலுள்ள சகோதர வாஞ்சைக்கும், அண்ணன் மேலுள்ள தேவதா விசுவாசத்துக் கும் நடுவே லக்ஷ்மணன் எத்தனை கஷ்டப்பட்டான். இராவணன் அவளைக் கடத்திச் செல்வதற்குச் சற்று முன்புகூட அவள் அவனை எத்தனை சுடுசொற்களால் திட்டிவிட்டாள்! அந்தப் பாபத்துக்குப் பரிகாரமுண்டோ?

'' கனிவுள்ள தம்பீ! நீ பொறுப்பாய், நான்
நினையாமற் சொன்ன சுடுவாக்குகளை
கவனமில்லாமற் சிலபோது
மனம் போகாத தீ வழிகள் இல்லையோ!''

தனக்கிடம் கொடுத்து இரட்சித்த வால்மீகி முனிவரையும் ஆசிரம வாழ்க்கையையும் நினைத்துக் கொள்கிறாள். இந்த வாழ் வுக்கும் அயோத்தியில் அரண்மனை வாழ்வுக்கும் எத்தனை வித்தி யாசம்! திருமணம் என்ற தூய சடங்கு எப்படியெல்லாம் வளைத்து ஒடிக்கப் பட்டிருக்கிறது! இராமனைப் பல வகையான கோணங்களிலிருந்து அவள் பார்க்கிறாள்.

'' அபகீர்த்திக்குப் பயந்த மன்னவன்
சுய வாழ்வைச் சோதனைக்குள்ளாக்கிச்
சமயோசிதம் இல்லாச் செய்கையால் என்
அப வாதம் திடமாக்க வில்லையோ?''

சென்ற நாட்களில் அவர்களுடைய இல்வாழ்க்கை இன்பமாக இருந்த தருணங்களை அவள் மறக்கவில்லை. இருப்பினும் இராமனி டம் கீழ்க்கண்ட கேள்வியைக் கேட்க அவள் தயங்கவில்லை.

'' மண்ணை யாள்வதற்கு வல்லவர்
மன்னவன் தம்பிகள் அல்லவோ?
ஸஹதர்மிணி யோடொத்துப் புவியிலே
ஏகமாய் வாழ இடம் இல்லையோ?''

இராமனின் நிலையையும் அவள் அறிவாள். கூடுமானவரை அதற்கேற்பத் தனது நிலையையும் சிறிது மாற்றிக் கொள்ளச் சித்த மாக இருக்கிறாள். ஆனால் அதில் எத்தனை ஏளனம் அடங்கியிருக் கிறது!

"அதிசங்கடமாம் நீதி தன்
கதி; கஷ்டம்! சுதந்திரர் அல்லர் மன்னவர்!
பதி நாடுகடத்தினார் என்னை; பலன்
பிரதிமையின் காதலன் ஆவதே!"

ஆசானின் ஸீதை வெறும் உணர்ச்சி மிக்க பெண்ணோ, குற்றம் சாட்டும் வனிதையோ, திண்மைக்கு இலக்காகிய தையலோ மட்டு மல்ல. அவளுக்கு விவேகமும் கனிந்த பரிவும் உண்டு. குற்றங்குறை களைச் சரியாக எடைபோட்டு நெறி தவறாமல் நீதியளிக்கவும் அவளுக்குத் தெரியும். குற்றம் செய்தவரின் சூழ்நிலையையும் மனநிலையையும் அறிந்த பிறகே நியாயம் வழங்குவாள். அதனால் தான் கடைசியில் கீழ்க்கண்டபடி சொல்கிறாள்.

"கோபத்தாற் பொறுமை யிழந்த நான்
இன்று தங்களிடம் கண்ட களங்கங்கள்,
அபிமானமுள்ள மனைவி யென்று
மன்னிக்க வேண்டும் என் தேவனே!"

பிறகு தன் அன்னையாகிய பூமியையும் தன்னுடன் வசிக்கும் மற்றப் பிராணிகளையும் ஸீதை கைகூப்பி வணங்கி விடைபெற்றுக் கொள்கிறாள்.

"ரமணீயமான வனங்களே! வண்டுகள்
மொய்க்கும் பூங்கொடிகளே! உங்களோ
டளவிலா அன்புடன் வாழ்ந்த நான், இன்று
விடைபெற வேண்டிவந்துள்ளேன்."

எல்லாவற்றுக்கும் மேலாக அவள் தன் காந்தனும் பிரபுவுமாகிய ஸ்ரீ ராமனிடம் விடைபெறுகிறாள்; அதை யார்தான் சகிக்க முடியும்!

"ப்ரிய ராகவா! வந்தனம்! நானுன்
கையணைப்பிலிருந்து உயர்ந்து
பயமின்றிப் பறந்து போகிறேன்,
வையகத்திலெனக்கினி ஒன்றுமிலையே!"

அப்புனிதவதியின் மனத்தில் கடுகளவேனும் வைராக்கியம் உண்டாகியிருந்தால் அது அந்தக் கணத்தோடு அடியோடு மறைந்து போய்விடுகிறது.

இந்தக் காவியத்தின் ஒவ்வொரு வரியும் எடுத்துச் சொல்லவும் படிக்கவும் இன்பமயமானவை. ஒவ்வொரு சொல்லும் மிகவும் கருத்துடன் ஆளப்பட்டிருக்கிறது. இந்தக் காவியத்தில் ஆசான் வாழ்க்கையைக் கலையென்ற மூசையில் உருக்கி உருவாக்கிக்

கொடுக்கிருர். ப்ரரோதனத்தைவிட எளிமையான நடையில் இருப்பினும் அதுபோலவே இதுவும் ஆழம் நிறைந்ததாகும். மனிதனுடைய மனத்தைவிட நுண்ணியது இவ்வுலகில் வேறில்லே, வெளிஉணர்வு, உணர்வு, உள்ளுணர்வு என்ற வேறுபட்ட நிலேகளேயெல்லாம் கடந்து மனித உள்ளத்தின் ஆழத்துக்குச் சென்று அதன் துடிப்பை யெல்லாம் நம் கண்முன்னே காட்டு கின்ருர் கவிஞர். இதுபோன்ற நூல் மலேயாள இலக்கியத்தில் அரிது. தொடங்கும்போதும் இறுதியிலும் தவிர மற்ற இடங்களில் இக்கவிதையில் எல்லாம் ஸீதை தனக்குத் தானே கூறிக்கொள்வது போல அமைந்துள்ளது. அவளுடைய மனோவிகாரத்தின் சக்தி யையும், செய்யுளின் நடையையும் காணும்போது இக்காவியம் ஈடு எடுப்பற்ற மாபெரும் கவிதை என்று திண்ணமாகக் கூறலாம். இறவாவரம் பெற்ற இதிகாசம், சிறந்த மனோ தத்துவமுறை களுடன் இணைந்து, ஒரு கவிஞரின் புலமைத்திறனுல் நல்ல காவிய மாக நமக்குக் கிடைத்திருக்கிறது.

# 10. கவிதையும் சமுதாய உணர்வும்

வடமொழிக் காவிய இலக்கண முறைப்படி மகாகாவியம் இயற்றிய கவிஞனுக்கே மகாகவி என்ற சிறப்புப்பெயர் சாதாரண மாகக் கிடைக்கும். பலர் மகாகவி யென்ற பெயர் பெறுவதற் காகப் பலகாலம் முயன்று மகாகாவியங்கள் புனேவதுண்டு. ஆனுல் குமாரன் ஆசான் அதற்காக முயற்சி செய்யாமலே மகாகவியானுர். நிபந்தனேகளுக்கு உட்பட்டு பட்டங்கள் வாங்குவதிலும் பரிசுகள் பெறுவதிலும் அவருக்கு விருப்பமில்லே. அதனுல் வேண்டுமென்றே மகாகாவியம் ஏதும் அவர் எழுதாமலிருந்தார். இருப்பினும் 'மகாகவி'ப் பட்டம் அவரைத் தேடிக்கொண்டு வந்தது. தவிர வேல்ஸ இளவரசர், 1922-ல் சென்னே நகருக்கு வந்திருந்தபோது ஆசான் புகழ்பெற்ற கவிஞர் என்பதால் அவருக்கு ஒரு பட்டாடை யும் தோடாவும் சம்மானமாக அளித்தார். அதை அணிந்திருக் கும் கோலத்தில் உள்ள கவிஞரின் புகைப்படத்தைக் கேரளத்தில் எங்கும் காணலாம்.

இனி, ஆசானின் கவிதைகளில் பூரண வளர்ச்சி பெற்ற கட்டத்தைப் பற்றி ஆராய்வோம். இங்கு, 'துரவஸ்தை',

'சண்டாள பிட்சுகி' என்ற இரு நூல்களைப் பற்றி விவரிக்கின்றேன். அவை இரண்டும் சமுதாய உணர்வைத் தூண்டிவிடும் நூல்கள். வேறு யாரும் அத்தனை ஊக்கத்தோடும் தீவிர நம்பிக்கையோடும் எழுதியிருக்க முடியாது. ஜாதி என்னும் கொடுமையையும், அதனால் ஹிந்துக்களிடையே ஒரு சாரர் வெகு நாட்களாக அடைந்து வந்த துன்பத்தையும் பற்றி நமது கவிஞருக்குச் சொந்த நிலையிலும் பொதுஜன ஊழியன் என்ற நிலையிலும் மிக நன்றாகத் தெரிந்திருந்தது. ஸ்ரீ நாராயண தர்ம பரிபாலன யோகத்தின் செயலாளர் என்ற நிலையில் கொடுமையை என்றும் எதிர்க்கவும் எளியோரின் சார்பாக வாதிக்கவும் அவர் என்றும் தயாராக இருந்தார். எனினும் 1923 வரை கவிதையைச் சமூக அநீதிகளை ஒழிப்பதற்கான கருவியாக அவர் உபயோகிக்கவில்லை. அவ்வாண்டில் தான் இவ்விரண்டு நூல்களும் எழுதப்பட்டன.

## துரவஸ்தை

இந்தக்கவிதை வெளிவந்த உடனேயே மலையாள இலக்கிய விமர்சகர்களை யெல்லாம் திடுக்கிடவைத்தது. அன்று அவர்களில் அனேகர் மேற்குலத்தோர். இக்கவிதையின் கதையும், தோரணையும், வடிவமும், சுருக்கத்தில் கவியும், எல்லாம் ஒரேயடியாக அவர்கள் பேணுமுனை எதிர்ப்பில் அகப்பட்டுக் கொண்டது. கதைச்சுருக்கம் பின்வருமாறு.

இந்தக் கதை மலபார் ஜில்லாவில் மாப்பிள்ளைக் கலகத்தின் சூழ்நிலையில் (1921-ல்) எழுதப்பட்டது. ஹிந்து-முஸ்லீம் கலவரம் நடக்கும் பொழுது பல குடும்பங்கள் சிதறிப் போயின. ஸாவித்திரி என்ற கதாநாயகி நம்பூதிரி வகுப்பைச் சேர்ந்தவள். அவள் தன் குடும்பத்தினரிடமிருந்து பிரிக்கப்பட்டு உயிர் பிழைப்பதற்காகத் திசை தெரியாமல் ஓடிப்போக வேண்டியிருக்கிறது. சாத்தன் என்ற புலைய இளைஞனின் குடிசையில் அவளுக்கு அடைக்கலம் கிடைக்கிறது. சிலகாலம் அவள் அங்கேயே தங்க வேண்டிய நிலை ஏற்படுகின்றது. அவர்களிடையே உண்டாகிய பழக்கம் முதலில் சிநேகமாகவும் சிறுகச்சிறுக வளர்ந்து காதலாகவும் மாறிவிடுகிறது. கடைசியில் அவர்கள் கணவனும் மனைவியுமாகிறார்கள். மலையையும் மடுவையும் இணைத்துவிடுவதுபோல நம்பூதிரியையும் புலையனையும் ஒன்றாக்கி விடுகிறார் கவிஞர். சாத்தனும் ஸாவித்ரியும் ஜாதி அரக்கனுடைய கொடுமையிலிருந்து தப்பிச் சுதந்திரமான ஆணும் பெண்ணும் ஆகின்றனர்.

ஆசான் இயல்பாக அன்றுவரை வடமொழிச்செய்யுள் வடிவத்திலேயே கவிதைகள் இயற்றி வந்தார். இந்நூலுக்குப் பிறகு அவர் சரளமாக ஓடும் மலையாள மரபைப் பின்பற்றத் தொடங்கினார்.

மனம் மருண்டு நிற்கும் ஸாவித்ரிக்கு ஓடிவிளையாடும் புருக்கள் தைரியம் நல்குகின்றன.

"கவலையின்றிக் களித்துத் திரியும்
இணைப்புருக்களைக் காணுங்கள். அவை
எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணிப்
புண்ணான மனங்கொண்டு நோவதில்லை.
அழுது அலறிக் கண்ணீர் பொழிவதில்லை.
கண்டாலறியாத காணாத வேற்றுமைகள்
காட்டி அவை தமக்குள் சாதிச்சமய
வழக்குகள் தொடுப்பதில்லை. அவனவன்
காரியம் அவனவன் காண்பதும்,
கண்டபின் எல்லோரும் ஓர்நிறை
ஓர்குலம் என்பதும், அவற்றின்சட்டம்.
மேன்மையும் தாழ்வும் சிறிதுமில்லை."

இதுபோன்ற பல வரிகளில் கவிஞர் ஜாதி என்பது வாழ்வின் எதிரி என்று மீண்டும் மீண்டும் அறிவுறுத்துகிறார். ஹிந்து சாஸ்திரங்களின் குருட்டுப் பக்தர்களுக்கும் கவிஞர்,

"மாற்றுக நம்முடைய சட்டங்களை ! இன்றேல்
மாற்றும், சட்டங்கள் நம்மையே!"

என்று முன்னெச்சரிக்கை தருகிறார்.

ஆசான் இக்கவிதையைச் சற்று அவசரமாக இயற்றியிருக்கிறார். அதனால் அதற்குச் சரியான இலக்கிய மதிப்புண்டோ என்ற ஐயம் அவருக்கு இருந்ததை அதன் முகவுரையிலேயே குறிப்பிட்டிருக்கின்றார். இலக்கியத்தில் பற்றுள்ளவர்கள் ஜாதியின் அநீதிகளையும் கொடுமைகளையும் உணர்ந்து அதற்கெதிராகக் கிளர்ச்சி செய்ய வேண்டும் என்பது அவர் அவா. அவ்வெண்ணம் நன்கு நிறைவேறியது. "என்னுடைய மற்றக் கவிதைகளையும் இதையும் ஒப்பிட்டு நோக்குங்கால், இது வழக்கமாக உள்ள லட்சணங்களிலிருந்து மாறுபட்டது என்பது விளங்கும். தவிரச் சமுதாய மாற்றம் என்ற துறையில் ஒரு சர்ச்சைக்கிடமான விஷயத்தைப்பற்றி இங்கே சொல்லப்பட்டிருக்கிறது. இதன் நாயகனும் நாயகியும் இரண்டு வேறு உலகங்களிலிருந்து வந்தவர்கள் என்பதனால் இதைப் படிப்பவர்களுக்கு இது உசிதமல்ல என்று தோன்றலாம். இது சாத்திரங்களுக்குப் புறம்பானது என்று பண்டிதர்கள் கூறலாம். இம்மாதிரி சக்தியுள்ள எதிர்ப்பைச் சமாளித்து வெற்றியடைவோமோ என்று எனக்குச் சந்தேகமுண்டு. எனினும் மேன்மையான ஒரு லட்சியத்தைப்பற்றி நாம் பாடுவது கடமை என்று தோன்றியதனால் இந்தத் துணிச்சலான காரியத்தில் இறங்கினேன்." என்று எழுதியிருக்கிறார்.

உயர்குலத்தில் பிறந்த ஸாவித்திரி புலையனாகிய சாத்தனுடன் பழக நேர்வதும், பரிசயம் முற்றி நட்பும் அது முற்றிக் காதலும் உண்டாவதும், முடிவில் அவர்கள் தம்பதிகளாவதும் எல்லாம் எதேச்சையாக நடக்கின்றன. அது அவர்கள் இருவரும் விரும்பியதா, விரும்பாததா என்பதைத் திண்ணமாகத் தெரிந்து கொள்ளமுடியாமல் இருப்பதனால், அவ்வளவுக்குக் கதையின் அமைப்பு இளைத்துப்போய் விடுகிறது. ஆசான் கவிதையை கடிவாளம் இல்லாமல் போகிறபோக்கில் விட்டிருக்கிறார் என்று தோன்றும். சில இடங்களில் மிகவும் நயமான வர்ணனைகள் இருப்பினும் சில இடங்களில் வேண்டாத சொல்லடுக்குகள் இருக்கின்றன. நீதி போதனை வெளிப்படையாக இருப்பதனால் கவிதையின் தரம் குறைகிறது. இப்படிச் சில குறைகள் இருப்பினும், 'துரவஸ்தை' ஒரு பெருங் கவிதைதான். சமுதாயப் புரட்சிக்கு அது அடிகோலியது. ஜாதி வித்தியாசங்கள் செயற்கையானவையென்றும், மனிதப்பண்புக்குப் புறம்பானவை என்றும் எல்லோரும் உணரும்படி செய்தது.

## சண்டாள பிட்சுகி

இக்காவியத்தை, 'துரவஸ்தை'யின் அனுபந்தம் என்று சொல்லலாம். இதற்கும் அதுவே லட்சியமாகும். ஆனால் தராசுத் தட்டுகள் மாறிவிடுகின்றன. இங்கே பெண்மணி தாழ்ந்த ஜாதியைச் சேர்ந்தவள். செய்யுளின் அமைப்பும், கதையின் போக்கும், கவிஞரின் கலைத்திறமையும் மாறியிருப்பதைக் கதையைப் படித்தபின் உணரலாம்.

இக்கதை பௌத்தமத நூலிலிருந்து எடுக்கப்பட்டது. ஸ்ரீ புத்த பகவானின் சீடன் ஆனந்தன், உச்சி வெயிலில் எங்கோ அலைந்து திரிந்துவிட்டு வருகிறான். ஓர் ஆலமரத்தடியில் அவன் வந்து நிற்கும்போது, அங்குள்ள கிணற்றில் தண்ணீர் எடுப்பதற்காகச் சண்டாள குலத்தைச் சேர்ந்த மாதங்கி வந்து சேர்கிறாள். தாகத்தால் தவிக்கும் ஆனந்தன் அவளிடம் தண்ணீர் மொண்டு தரச் சொல்கிறான். தன் கையால் எடுத்த தண்ணீரை அவன் குடிப்பானா என்று அவளுக்கு சந்தேகம். அதைப்பற்றி முடிவு செய்ய வேண்டியவன் பிக்ஷு, அவனே வேண்டுமென்று சொல்லும் போது இல்லையென்பதற்கு அவள் யார்? அவள் மொண்டு தருகிறாள். அவன் குடிக்கிறான். இந்த எதிர்பாராத சந்திப்பு அவள் மனத்தில் ஒரு புல்லரிப்பை உண்டாக்குகிறது. அவளுடைய மனதும் அவன்பால் ஈடுபடுகிறது. ஓரிரவு முழுவதும் உறக்கமின்றிக் கழிந்த பிறகு அடுத்த நாள் காலையில் அவள் புத்த விஹாரத்திற்குப் போகிறாள், அவளுடைய அன்பின் பரிசுத்தத்தைக்

கண்டு பகவான் புத்தர் அவளைத் தம் சிஷ்யையாக ஏற்றுக்கொள்கிறார். மேற்சாதியினர் இது கண்டு வெகுண்டு அரசனிடம் போய் முறையிடுகின்றனர். அரசனே இதுபற்றிப் புத்தரிடம் வாதாடுவதற்காக விஹாரத்துக்கு வருகிறான். புத்தர் அவனிடம் ஜாதியின் தீமைகளை எடுத்துச்சொல்லி அவனைத் தம் வழிக்கு மாற்றிவிடுகிறார், குறை கூறியவர்களுக்கு ஏமாற்றம். மாதங்கியை பிட்சுணியாகச் சேர்த்துகொண்டதற்கு உண்டான எதிர்ப்பு அடங்கியபோதிலும், ஆனந்தன் மீது அவள் கொண்ட அன்பு என்னவாயிற்று என்பது நூலில் விளங்கவில்லை. ஒரு வேளை, புதிய சூழ்நிலையில் அந்தக் கேள்வியே எழாது போலும்!

இந்தக் கதையை வைத்துக்கொண்டு கவிஞர் நமக்கு மிகவும் நல்ல ஒரு கவிதையை வடித்துத் தந்திருக்கின்றார். காவியத்தில் எங்கும் மிக அழகிய வர்ணனைகள் காணப்படுகின்றன. பிக்ஷு தண்ணீருக்காகத் தம் கையை நீட்டுகிறபோது மாதங்கி அவர் கண்களுக்கு எப்படித் தோன்றுகிறாள், பாருங்கள்.

''கரிய கார்க் கூந்தல் மூடும்
முட்டாக்கின் வழியே காணும்
முக கமலம்; புன்முறுவல் பூக்கும்
பவளவாய் சற்றே திறந்தும்
இருண்ட வானிற் தாரகைகள்
ஒளிர்வதுபோல் மருளும்
மைக்கண்ணியாள்; அருணன்
தட்டிய செந்தாமரை, மலரல்லியில்
முட்டும் வண்டினங்கள் முரல,
மெல்ல மலர்வது போல்
மடந்தை மாதங்கி வந்தாள்.''

அன்றைய இரவு ஒருமாதிரியாக கழிந்து போயிற்று. அடுத்த நாள் பகலில் அவள் புத்தர் பெருமானைச் சந்தித்தபோது அவள் மனம் எப்படியிருந்தது? பார்ப்போம்.

''புதுத் தீபத்தின் முன் விட்டில் போலே,
கதிரவன் முன் பூமிபோலே,
அதி புத்திமான் முன் பாமரன் போலே,
போதமாம் கல்வி முன் தளரும் ஐயம் போலே''
மாதங்கி தயங்கித் தயங்கி வருகின்றாளாம்,

அவளுடைய தடுமாற்றத்தை கண்டு அன்பே உருவான ஸ்ரீ புத்தபகவான் அதை மாற்றிக் கீழ்க்கண்டவாறு அருளிச் செய்கிறார்.

'' மகளே! நின் வருகை நன்று!
நடந்ததெலாம் நாமறிவோம்.
அன்பன் ஆனந்தனின் தாகம்

தீர்த்த கனிவுடைக் குமரி,
நினக்கினி ஒரு நாளும், முடிவிலா
மாயையாம் ஜனன மரணமெனும்
பயமிலா திருக்கட்டும் !''

அரசனுக்கும் புத்தருக்குமிடையே ஜாதியை பற்றி நடக்கின்ற உரையாடல் தான் அடுத்தபடியாக இந்தக் கவிதையிலே மிகவும் தீவிரமான நடையில் எழுதப்பட்டிருக்கிறது. கவிஞரின் எண்ணக் கொந்தளிப்பு பகவான் புத்தர் வாயிலாக வெளிப்படுகின்றது.

''விடை பகர்வாய், அரசே......?
அந்தணன் ஓதுவது, மரக்கொம்பில் நின்றே,
அல்ல, முகிலில் நின்றே?
வேள்வித் தீப்போலே, வேதியர்
வெண் சமித்திலிருந்தோ பிறப்பார்?
ஜாதி எதுவென்று மனிதர்
குருதியும் எலும்பும் சொல்லுமோ?
இருமுறை பிறந்தோனின் பீஜம்
ஒரு முறை பிறந்தவளில் வளராதோ?
பொட்டும் பூணூலும் குடுமியும்
பூமியிற் பிறக்கும் போதுண்டோ?
எழுத்து வடிவமாம் ஈசனை
பழுத்த படிப்பின்றி அறிவரோ?''

மிகச் சில கவிஞர்களே ஜாதிப்பித்தலாட்டத்தை இம்மாதிரியான சக்தி வாய்ந்த சொற்களால் கண்டித்திருக்கின்றனர். மடையர்களின் எரியும் மனத்திலிருந்து எழும் புகைதான் ஜாதி என்னும் கொடுங்கோன்மை என்பது ஆசானின் துணிபு. புத்தர் அரசனிடம் ஜாதியென்னும் இழிந்த நிலையை விட்டு, அன்பையும் இரக்கத்தையும் வளர்த்து மேன்மை யடையும்படி அறிவு புகட்டுகிறார். ஷேக்ஸ்பியர் எழுதிய 'வெனிஸ் நகர வணிகன்' என்னும் நாடகத்தில் வரும் இரக்கத்தைப் பற்றிய சொற்பொழிவைப் போன்ற ஒரு பகுதி இக்கவிதையிலும் சிறப்பாக அமைந்திருக்கிறது.

'' ஆசைகளை விட்டு மாந்தர்,-மன்னா!
அன்பை வளர்க்கவே வேண்டும்.
அன்பாற் பிறந்ததுலகம்.
அன்பால் வளர்வது அதுவே.
அன்புதான் பாரில் வன்மை.
அன்புதான் இன்பப்பாதை.
அன்பு ஒன்றே வாழ்வு.
அன்பின்மையே முடிவு.''

மாதங்கி ஆனந்தனிடம் ஏற்பட்ட மதிப்புக் கலந்த அன்பின் வழியாக ஓர் உயர்ந்த நிலையை விழைகிறாள். விரைவில் அது

வெறும் மனிதனிடம் வைத்த அன்பு என்ற நிலையிலிருந்து அன்பே சிவம் என்ற ஞானப்பாதையிற் கூடி அவளை அழைத்துச் செல்கிறது. மேற்சாதியஞகிய ஒரு பிக்ஷுவின் தாகத்திற்குத் தண்ணீர் கொடுத்தது என்ற எளிய செயல் அவள் வாழ்க்கையில் புதிய ஏட்டைத் தொடங்குகிறது. அவள் ஜாதி என்னவென்று அறியாத ஓர் உலகை அடைகிருள். அங்கு உண்மையான அன்பு என்ன என்பதை அறிகிருர். அவள் தாஞகவே முனைந்ததன் மூலம் அவளுக்குப் புதிய வாழ்க்கை கிடைத்தது. ஸாவித்ரி தன் சக்திக்கு மேற்பட்ட சூழ்நிலைகளின் விளைவாகத்தான் தன் நாயகனுகிய புலையனின் குடிலை அடைகிருள். மேலெழுந்த வாரியாகப் பார்த்தால், ஸாவித்ரி தாழ்ந்த நிலையை அடைந்தாள் என்றும் மாதங்கி உயர்ந்த நிலையை அடைந்தாள் என்றும் தோன்றும், எனினும் இருவரும் மனநிறைவு என்ற ஒரே நிலையைத்தான் அடைந்தார்கள் என்பது தெளிவு. எப்படியாகிலும் இரண்டிலும் ஜாதிக் கோட்டைகள் தகர்கின்றன; தவிடுபொடியாகின்றன. எடை போட்டால் சண்டாளபிக்ஷுகி என்ற காவியம் துரவஸ்தை என்ற காவியத்தை விட இலக்கியச் சிறப்பு வாய்ந்தது. துரவஸ்தை கடினமான வெட்டுக்கல். சில இடங்களில் சொர சொரப்பாக இருக்கும். சண்டாளபிக்ஷுகி வழுவழுப்பாக இழைக்கப்பட்ட கல். அதனுல் வலிமையும் மென்மையும் ஒருங்கே உடையது.

இவ்விரண்டு கவிதைகளும் ஆசானின் முத்திரை பெற்ற பாட்டுக்கள், தம் வாழ்நாள் முழுவதும் தாழ்த்தப்பட்டோரின் உரிமைகளை மீட்பதற்காகச் செலவிட்டார். உதிர்ந்த பூ, நளினி, ஸீதை முதலிய காவியங்களை வேறு யாராவது பெரிய கவிகள் எழுதக்கூடும், ஆனுல் துரவஸ்தையையும் சண்டாள பிட்சுகியையும் வேறு யாராவது எழுத முடியும் என்று தோன்றவில்லை. அவர் சமூகப் புனரமைப்பில் அத்தனை ஈடுபாடு உள்ளவராக இருந்ததனுல்தான் அவ்விரு நூல்களையும் அத்தனை சுவையுள்ளதாகச் செய்ய முடிந்தது. காதலைப்போல சமூகத்தின் மேடு பள்ளங்களை அகற்றும் சக்தி வேறு எதற்குமில்லை. எல்லோரும் ஒன்று என்று சொல்லிக்கொண்டால் அதற்குள்ள ஒரே உரைகல் கலப்புத் திருமணம் ஒன்றுதான். பரந்த மனப்பான்மை உடையவர்கள் சமூக ஏற்றத்தாழ்வுகள் இல்லாமல் மாற்றுவதற்கு எத்தனையோ மாறுதல்கள் செய்யச் சித்தமாக இருப்பார்கள். எனினும் சோதனை செய்யும்போது அவர்களிற் பலரும் தோல்வியுறுவார்கள். ஆசான் சிக்கலின் அடிப்படைக்குச் சென்று அதற்கான முடிவைக் காட்டுகின்ருர். ஸமபந்தி போஜனம் என்பது மேற்பூச்சுப் போலத்தான். ஆசான் எல்லாரும் ஓர் குலம் என்ற லட்சியத்தைப் பரப்பினர். அது எழுத்தளவில் இருந்தபோதே எத்தனையோ பேர் பயந்து போஞர்கள். எதிர்ப்பு இருக்கும் என்பது எதிர்பார்க்கப்

பட்டதுதான். முஸ்லீம்களும் மேல் வகுப்பைச் சேர்ந்த இந்துக்களும் ஆசானை அன்று கண்டனம் செய்தார்கள். ஆனால் இன்று காலம் மாறிவிட்டது. கலப்பு மணம் என்பது பொதுவாக ஒப்புக் கொள்ளப்பட்டு நடைமுறையில் இருந்து வருகிறது. இந்த மாபெரும் மாறுதலுக்கு ஆசானும் அவர் கவிதைகளும் பெரும் அளவில் பொறுப்பாளிகள்.

# 11. சிறிய பாட்டுக்கள்

முன்பே குறிப்பிட்ட சிறிய துதிப் பாடல்களைப் போல வேறு சில சிறப்பான சிறு பாடல்களையும் ஆசான் இயற்றியிருக்கிறார். அவை 'புஷ்பவாடி', 'மணிமாலை', 'வனமாலை' என்ற மூன்று தொகுப்புகளாக வெளியிடப்பட்டிருக்கின்றன. முதல் தொகுப்பைக் கவிஞரே தொகுத்து வெளியிட்டார். மற்ற இரண்டும் கவிஞரின் மனைவியால் தொகுக்கப்பட்டு வெளிவந்தன. அவற்றில் சில பாட்டுகள் சில விசேஷ நிகழ்ச்சிகளையொட்டி எழுதப்பட்டவை. இருப்பினும் குன்றாத சுவையுள்ளவை. சில இயற்கையழகை ரசித்து எழுதப்பட்டவை. வேறு சில பாட்டுகள் ஆசானின் கொள்கைகளைப் பிரசாரம் செய்வதற்காக எழுதியவை. கருத்திலும் வடிவத்திலும் அவற்றில் சில மலையாளக் கவிதை இலக்கியத்தின் மணிகளாக உள்ளன.

காதற் கவிஞர் என்று அவர் புகழ்பெற்ற போதிலும், சுதந்திர ஆர்வத்தில் அவர் சிறிதும் குறைந்தவர் அல்ல என்பது அவருடைய சிறிய பாடல்களின் வழியே காணப்படும். "ஒரு உள்போதனம்' என்ற பாட்டு, நாட்டு விடுதலைக்கு எப்பாடு பட்டும் மக்கள் வீறுகொண்டெழவேண்டும் என்று உருவகமாகச் சொல்கிறது.

"ஸ்வதந்திரம் தன்னே அமிர்தம்.
ஸ்வதந்திரம் தன்னே ஜீவிதம்.
பரதந்திரம் மானிகள்க்கு
ம்ருதியேக்கால் பயானகம்.''

[பரதந்திரம்: மற்றவர்க்கு அடிமைப்படுவது; ம்ருதி: சாவு; பயானகம்: பயத்தை அளிப்பது, கொடுமையானது].

'ஸிம்ஹ நாதம்' என்ற பாட்டில் இதைவிட இடிமுழக்கத்துடன் மக்களை சமூக அநீதிகளுக்கு எதிராகப் போராடும்படி அழைக்கின்றார் கவிஞர்.

"உணரின் ! உணரின் ! உள்ளில் ஆத்மசக்திப்
ப்ரணயமெழும் ஸஹஜாதரே ! த்வரிப்பின் !
ரணபட ஹமடிச்சு ஜாதி ரக்ஷ-
-ஸ்ஸன் அணவோரிடங்களிலெத்தி நேர்ப்பின் !"
[ப்ரணயம்: அன்பு; ஸஹஜாதர்: உடன் பிறந்தவர்]

*1922*-ல் ஏரமல்லூரில் நடைபெற்ற ஸ்ரீ நாராயண தர்மபரிபாலன யோகத்தின் தொண்டர்படைக் குழுவினர் பாடிக்கொண்டு நடந்து செல்வதற்காக 'ஸ்வாதந்திரிய காதை' என்பதை எழுதினார். அதற்குப் பிறகு என்றும் எப்போதும் சமூகக்கொடுமைகளை ஒழிப்பதற்காகக் கூட்டப்படும் எல்லாப் பொதுக் கூட்டங்களிலும் அந்தப் பாட்டு இன்றும் பாடப்படுகிறது. ஆசான் வெறும் அரசியல் சுதந்திரத்தை மட்டும் விரும்பியவரல்ல. சமூகப் பொருளாதாரத் துறைகளிலும் சுதந்திரம் இருக்கவேண்டும் என்று அவர் விரும்பினார். இப்பாட்டில் அவர் சுதந்திர தேவனிடம் தங்களைக் கட்டியிருக்கும் விலங்குகளை உடைத்தெரியுமாறு வேண்டுகின்றார். அந்தப் பாட்டில் சில அடிகளைக் கீழே காணலாம்.

"சுதந்திரமாம் நாட்டின் பேரரசே !
நின் ஒளிப் பிழம்பாம் அரியணையில்
திருக்கையில் செங்கோலேந்தி
எங்களை வாழ்த்திடுவாய், எம்பிரானே !
உன் அரசு வாழ்க.
அச்சமிலா மக்கள் உன்பெயர் ஓதவே,
திக்கெலாம் எதிரொளி கொள்க.
உறையிலிடா உன் உடைவாள் மின்னவே,
எமது கைகால் தளைகளை வெட்டி
விடுதலை நல்குவாய், எம்பிரானே.
சாதிக் கோட்டையை இடித்துத் தகர்க்கவும்,
மீட்சியெனும் ஆற்றில் முங்கிக் குளிக்கவும்,
எங்களை உயர்த்துவாய், எம்பிரானே !
ஸத்தியமே மூச்சு
ஸமத்துவமே காட்சி,
அன்பே உணவு
இவையெல்லாம் கொண்டு
நாமும் மனிதரென நடந்து செல்ல
இவ்வுலகிலோர் வானை
எங்களுக்கருளுவாய், எம்பிரானே !"

இதுபோலவே "ஒரு ராஜ்யம் நிங்கள்க்கு ஒரு நிங்கள்க்கொரு தேவன் நிங்கள்க்கொரு ஸமுதாயம்" என்று 'ப்ரபாத நக்ஷத்ரம்'

என்ற கவிதையில் பாடுகிருர். அதே யுகப் புரட்சி மனப்பான்மை, சீர்திருத்தவாதியாகிய சகோதரன் அய்யப்பன் என்ற அன்பரின் விருப்பத்துக்கிணங்கிப் பாடிய 'பரிவர்த்தனம்' என்ற பாட்டிலும் காணப்படுகிறது.

இயற்கையின் எழிலில் ஈடுபட்டு மனமுருகிப் பாடியவை' 'கபோத புஷ்பம்', 'மின்னு மினுங்கி', 'தோட்டத்திலே எட்டுக் காலி', 'பாரத மயூரம்' என்ற பாட்டுகள். இவற்றிலெல்லாம் உவமைகளும் வர்ணனைகளும் வாரிச் சொரியப்பட்டிருக்கின்றன. சொல்லுக்கடங்காத கலையாகிய கவிதையைப் பற்றி மிகவும் அழகாக வர்ணித்து எழுதப்பட்டிருக்கும் ஒரு பாமாலை, 'காவ்யகலா அல்லது ஏழாம் இந்திரியம்' என்னும் பாட்டு, கவிதா தேவியின் புகழைப் பாடும் கவிஞர் அதன் நூதன நுட்பங்களை வெகு சாமர்த்தியமாக நமக்கு முன்பு கொண்டு வருகின்ருர். இதனுல் அந்தப் பாட்டு மற்ற எல்லாக் கவிதைகளையும்விடத் தனக்கென ஒரு முதன்மையான இடத்தைப் பெற்று விளங்குகிறது.

அதுபோலவே 'ஸி. வி. ஸ்மாரகம்', 'வண்டின் பாட்டு' 'ஸங்கீர்த்தனம்', 'திவ்யகோகிலம்', 'நிஷ்கபடதையோடு' என்ற சிறு காவியங்கள் மகானுகிய சொற்சிற்பியின் என்றும் அழியாப் பரிசுகள்.

# 12. வேறு திறங்கள்

இதுவரை ஆசானை கவிஞர், சமூக சீர்திருத்தவாதி என்ற இரு நிலைகளிற் கண்டோம். அவருடைய வாழ்க்கையில் அவர் வகித்த பொறுப்புகள் பல. பெற்ற புகழ்மாலைகளும் பல. அவற்றில் சிலவற்றைப் பற்றி இங்கு ஆராய்வோம்.

**பத்திரிகை ஆசிரியர்**

ஆசான் 'விவேகோதயம்' என்ற பத்திரிகையின் ஆசிரியராக இருந்தார் என்று முன்பே கூறினோம். அதற்கும் சுவாமி விவேகானந்தருக்கும் உள்ள தொடர்புபற்றியும் சொன்னோம். மக்களுக்கு விவேகம் ஊட்டும் பத்திரிகையை விவேகோதயம் என்று அழைப்பது பொருத்தந்தான். இது எல்லோருக்கும் உரியது, ஒரு வகுப்பினருக்கு மட்டும் உரியதன்று என்பது அதன் ஆசிரியர் என்ற நிலையில், ஆசான் எண்ணம். அதில் வெளிவந்த இலக்கியங்களும் பொது

அறிவுக் கட்டுரைகளும் எல்லோருக்கும் இன்பமும் அறிவும் அளிப்பனவாக இருந்தன. ஆசான் எழுதிய தலையங்கங்கள், கருத்திலும் நடையிலும் சிறந்து விளங்கின. பலருக்கும் பிடித்திருந்தன. நாட்டின் தலைவர்கள் அவருடைய பயமற்ற விமரிசனங்களைப் பாராட்டினார்கள். அன்று சர்க்கார்ப் பள்ளிக்கூடங்களில் நடந்து வந்த பட்சபாதமான காரியங்களைப் பற்றி அவர் தயங்காமல் எதிர்த்து எழுதிய தலையங்கங்கள் இன்றும் அநேகருக்கு நினைவிலிருக்கின்றன. ஈழவர்களுக்கு இலவச ஆரம்பக்கல்வி கிடைக்காதது பற்றியும், பிற்போக்கு இனத்தாருக்கு வேலை வாய்ப்புகள் இல்லாதது பற்றியும் அவர் காரசாரமாக எழுதியிருக்கிறார்.

திவான் ஸ்ரீ வி. பி. மாதவராவ் அவர்களின் காலத்தில், திருவாங்கூர்ப் பிரஜா ஸபையில், ஈழவர்களுக்கு, ஆசானின் புத்தி வன்மையினாலும், அவர்களுடைய இடையறாத முயற்சியினாலும், சில இடங்கள் கிடைத்தன. மேற்சாதியினரின் பிடியிலிருந்த சில பத்திரிகைகளுக்கு அது பிடிக்கவில்லை. 'மதராஸ் மெயில்' பத்திரிகை அதைப் பற்றிப் புகழும்போது, ஈழவர்கள் பிராம்மணருடைய கூட்டத்தில் தாழ்ந்த நிலை உள்ளவர்கள் என்று எழுதித் தனது அறிவின்மையை வெளிப்படுத்தியது. மதுரையிலிருந்து வெளிவந்த 'மலபார் மெயில்' என்னும் பத்திரிகை நம்பூதிரி முதலிய மேற்குலத்தோருடன் சரிநிகராக ஈழவர்களின் பிரதிநிதிகளையும் இருக்கும்படி அனுமதித்த திவானின் புகழைப் பாடியது. இப்படிப்பட்ட அறிவின்மையும், வஞ்சப் புகழ்ச்சியும் ஆசானுக்குப் பிடிக்காத காரியங்கள்.

" இம்மாதிரியான பூலோக தேவர்கள், தேவேந்திரனின் பிரதிநிதிகள் முதலியோருடன் ஒரே இடத்தில் இருப்பது மேன்மை என்று நினைக்கும்படியான மூடர்கள் ஈழவர்களிடையே இல்லை," என்று ஆசான் எழுதினார். உண்மையை விரும்பும் ஈழவர்கள் பட்சபாதமில்லாத ஒரு திவானிடமிருந்து என்ன நன்மைகள் கிடைக்கும் என்று எதிர்பார்ப்பார்கள் என்று அவர் தொடர்ந்து எழுதினார். நாமார்க்கும் குடியல்லோம் என்று நம்பிய நமது கவிஞருக்குப் பிற்போக்கு நிலையென்பது கொடிய விஷமாகத் தோன்றியது. மானம் அவருக்கு மிகப் பெரிது. அவருடைய எழுத்தில் அது எங்கும் காணப்படும்.

1904 முதல் பதினைந்து ஆண்டுகள் அவர் விவேகோதயத்தின் ஆசிரியராக இருந்தார். திருமணத்திற்குப் பின் அவர் அதிலிருந்து விலகிக்கொண்டார். எனினும் நாராயணகுருசுவாமிகள் ஆசானை வேறு விதத்தில் உபயோகப்படுத்திக் கொண்டார். சுவாமிகள் கட்டளைக்கிணங்கி ஆசான் ஆலவாய் அத்வைத ஆசிரமம், அதனுடன் சேர்ந்த வடமொழிப் பள்ளிக்கூடம் இவற்றின் பொறுப்பை ஏற்றுக்கொண்டார். அப்போது கொச்சி ராஜ்யத்தில்

செராயி என்ற பகுதியைச் சேர்ந்த ஈழவர்கள், தாங்கள் தொடங்கிய விஞ்ஞான வர்த்தினி சபையின் இதழாகிய 'பிரதிபா' என்னும் பத்திரிகையின் ஆசிரியராக வேண்டும் என்று அவரை வற்புறுத்தினார்கள். அதற்கிணங்கிப் பொறுப் பேற்ற ஆசான் அதில் தற்கால அரசியல், சமூகக் காரியங்கள் இலக்கிய வளர்ச்சி என்பவை பற்றி மீண்டும் கட்டுரைகள் எழுதினார். 'தீபார்ப்பணம்', 'ஸங்கீர்த்தனம்', 'குணநிஷ்டை' என்ற கவிதைகள் அந்தப் பத்திரிகையில் தான் முதலில் வெளிவந்தன.

'ஸரஸ்வதிரங்கம்' என்ற பெயரில் அதன் இரண்டு இதழ் களில் அசான் இலக்கிய விமர்சனம் பற்றித் தமது கருத்துக்களை வெளியிட்டிருக்கிறார். புத்தக விமர்சனம் எப்படிச் செய்யவேண்டு மென்பதற்கு அது நல்ல எடுத்துக்காட்டாக இருக்கிறது. நல்ல விமர்சனம் படிப்பதற்கு இன்பமாக இருக்கவேண்டும். நற்போத னைகள் அடங்கியிருக்க வேண்டும் பட்சபாதமின்றி எழுதப்பட வேண்டும், இனி விமர்சகர் என்ற நிலையில் அவரைப் பற்றி ஆராய்வோம்.

**விமர்சகர்**

எல்லாக் கவிஞர்களும் விமர்சகர்கள் ஆகிவிட முடியாது. ஆக்க முயற்சியில் ஈடுபட்ட ஒருவர் மற்றவர்களின் ஆக்கத்திறனைப் பற்றி எழுதத் துணிவதில்லை. ஆசான் இதற்கு விலக்கு. பத்திரிகை ஆசிரியர் என்ற நிலைமையில் பலர் எழுதிய கதைகள், கட்டுரைகள், கவிதைகள், இவற்றையெல்லாம் அவர் மதிப்பிட நேர்ந்தது. அவருடைய மதிப்புரைகள் விவேகோதயம், பிரதிபா என்ற இரு பத்திரிகைகளிலும் வெளிவந்தன.

மகாகவி வள்ளத்தோல் நாராயண மேனோன் எழுதிய 'சித்ர யோகம்' என்ற மகா காவியத்துக்கும், மகாகவி உள்ளூர்ப் பாமேசுவர ஐயர் எழுதிய 'உமா கேரளம்' என்ற மகா காவியத் துக்கும், பந்தளம் கேரள வர்மா எழுதியா 'ருக்மாங்கத சரிதம்' என்ற மகா காவியத்திற்கும், ஆசான் எழுதியிருக்கும் மதிப் புரைகள் மிக நுட்பமானவை. சித்ரயோகத்துக்கு அவர் எழுதிய மதிப்புரை இலக்கிய உலகத்தையே ஒரு குலுக்குக் குலுக்கிவிட்டது. அதில், வடமொழி இலக்கணத்தில் இப்படி ஒரு விஷயத்தைப் பற்றிச் சொல்லியிருக்கிறது என்ற ஒரு காரணத்துக்காக ஒரு மகா காவியம் எழுத வேண்டுமா என்று அவர் கேட்டார். ஒரு கதையைத் தழுவிக் கவிபாடும்போது எதற்காக கண்டபடி, நாட்டு வர்ணனை, நகர வர்ணனை, இயற்கை வர்ணனை என்று எழுதிக் குவித்துக் கவிதையின் மேன்மையைக் குறைக்க வேண்டும் என்று அவர் கேட்டார். கண்ணை மூடிக்கொண்டு சம்ஸ்கிருத இலக்கண முறைகளைப் பின் பற்றுவதை அவர் எதிர்த்தார். அதனால் எழுதும் கவிஞரின்

பழமைப்பித்தம்தான் வெளியாகிறது என்று அவர் கூறினார். அதோடு சில பாகங்கள் வடமொழிக் காவியங்களின் தழுவல்கள் என்றும் எடுத்துக் காட்டினார்.

உடனே வள்ளத்தோலின் கட்சியென்றும் ஆசானின் கட்சியென்றும் இலக்கிய அன்பர்கள் இரண்டு பிரிவுகளாகப் பிரிந்தனர். பெரும் சண்டை மூண்டது. அன்றைய பெரும் கவிஞர்கள் என்று இருவரும் ஒப்புக் கொள்ளப்பட்டிருந்தனர். அவர்கள் இருவரும் பொறாமை என்னும் நோயினால் தாக்கப்பட்டிருந்தனரா என்பது நிச்சயமாகச் சொல்லமுடியாத விஷயம். அன்று எந்தக் காரியத்திலும் ஜாதிச் சச்சரவு இடம்பெற்றிருந்தது. இது ஒரு நாயர் கவிக்கும் ஈழவக் கவிக்கும் இடையே ஏற்பட்ட விவாதம் என்றும் எண்ணினர். வி. உண்ணிக் கிருஷ்ணன் நாயர் என்ற வேறு ஒரு கவிஞர் வள்ளத்தோலின் சார்பாக ஒரு மறுப்புரை எழுதினார். ஆசான் அதற்குப் பதிலாக மீண்டும் தம் நிலையை வற்புறுத்தி விமர்சனத் தத்துவங்களை நிரூபித்து எழுதினார். இவ்விரண்டாம் மதிப்புரை அவருடைய ஆழ்ந்த அறிவையும், மென்மையான கவிதை உணர்வையும் பரந்த புத்திக் கூர்மையையும் காட்டுகிறது.

ஒரு மதிப்புரைககு இத்தனை எதிர்ப்பா என்று ஆசான் மனம் நொந்தர். சில பத்திரிகைகள் அவரை மட்டமான முறையில் இகழ்ந்தன. கோபம் வந்தபோதிலும் அதை அடக்கிக் கொண்டு அமைதியுடனே அவர் பதில் எழுதினார். இரண்டாம் மதிப்புரையின் கடைசிச் சொற்கள் இவை: "உண்மையாக மதிப்பீடுசெய்து எழுதுபவர்களுக்கு எதிரே இத்தனை ஈனமான சொற்போர் தொடங்கி மக்களின் மனத்தை விமர்சனத்தின் பெயரால் மலினப்படுத்த முன்வரும் சில பத்திரிகைகள், தங்கள் இழிசெயலுக்காகத் தாங்களே வெட்கித் தலைகுனிய வேண்டும். இல்லாவிடில் நாம் நமக்குள்ளேயே வருத்தப்பட்டுக் கொள்வதன்றி வேறு வழியேது?"

மற்ற இரண்டு மகாகாவியங்களின் மதிப்புரைகளும் பெரும்பாலும் அனுகூலமாகவே இருந்தன. எனினும் எதற்காக இப்படி உளுத்துப்போன பத்தாம்பசலி நடையில் கவிதைகள் இயற்ற வேண்டும் என்று ஆசான் வினவினார். உள்ளூர் பரமேச்வர ஐயரின் 'உமாகேரளம்' சிறந்த ஒரு மகாகாவியம் என்பது ஆசானின் கருத்து.

மகாகவி வள்ளத்தோல் நாரயணமேனன் வாளா இருக்கவில்லை. அன்று அவர் 'ஆத்மபோஷிணி' என்ற பத்திரிகையின் ஆசிரியராக இருந்தார். அதில் அவர் ஆசானின் இரங்கற்பாவாகிய 'ப்ரரோதன'த்திற்கு ஒரு கடுமையான மதிப்புரை எழுதினார். அதற்கு ஆசான் பதிலாக வேறு ஒரு கட்டுரை எழுதினார். இவையும் வேறு சில மதிப்புரைகளும் 'நிரூபணங்கள்' என்ற பெயரில் ஒரு புத்தகமாக வெளியிடப் பட்டிருக்கின்றன. அவற்றில்

வள்ளத்தோலின் 'பந்தன ஸ்தனுகிய அனிருத்தன்' என்ற கவிதையைப் பற்றிப் புகழ்ந்துள்ள ஒரு மதிப்புரையும் இருக்கிறது. வேறு யாராவது கவிஞர் நல்ல காவியங்கள் இயற்றிஞல் அதைப் பாராட்ட எப்போதும் ஆசான் தயாராக இருந்தார் என்பது இதஞல் விளங்கும்.

**மொழிபெயர்பாளர்**

ஆசான் மொழிபெயர்ப்பு வாயிலாகவும் மலையாள இலக்கியத்திற்குத் தொண்டு செய்திருக்கிருர். அதில் முதன்மையானது, 'புத்த சரிதம்.' ஸர் எட்வின் ஆர்ஞல்டு என்ற ஆங்கிலேயர் எழுதிய 'ஆசிய ஜோதி' என்ற ஆங்கில நூலின் மொழிபெயர்ப்பாகும் இது. ஆசான் புத்தர் பிரானின் வாழ்க்கையிலும் கோட்பாடுகளிலும் மிகவும் ஈடுபட்டவராதலின், அம்மகானின் வாழ்க்கையை எளிய கவிதையாக மலையாளத்தில் எழுத விரும்பிஞர். 1903-ல் அதை எழுதத் தொடங்கியபோதிலும். 1915-ல்தான் ஒருவாறு அது முற்றுப் பெற்றது. பிரசுரிப்பதிலும் சில தொந்திரவுகள் நேர்ந்தன. விவேகோதயம் பத்திரிகையில் சில பாகங்கள் வெளிவந்தன. 1918-ல் கவிஞர் மீண்டும் தொடர்ந்து எழுதிஞர். கடைசியாக ஐந்தாம் சருக்கம் எழுதி முடித்தபோது 1924 ஆயிற்று. முதல் இரண்டு சருக்கங்களும் சரியான மொழிபெயர்ப்புகள் தாம். அதற்குப்பின் வந்தவை மொழிபெயர்ப்புகள் அல்ல. சொந்த சிருஷ்டிகள் தாம். மூலநூலில் எட்டுப் பகுதிகள் உள்ளன. அவற்றில் ஐந்து மட்டுமே மொழி பெயர்ப்பில் அடங்கியுள்ளன. ஐந்தாம் பகுதியைத்தான் கவிஞர் தம் வாழ்நாளின் இறுதியில் எழுதிஞர். மூலநூலின் சுவை சிறிதும் குன்ருமல் ஆசானின் கவிதை அமைந்துள்ளது.

'பாலராமாயணம்' என்ற நூலும் வால்மீகி ராமாயணத்தைத் தழுவியது. சிறுவர் சிறுமியரின் மனவளர்ச்சியைக் கருதி எழுதப்பட்ட இந்த நூல் வயது வந்தவர்களுக்கும் இன்பம் தரும். காவிய நடை எளிமையும் மென்மையும் ஒருங்கே பெற்று அழகுடன் திகழ்கிறது. எட்டு எழுத்துக்கள் அடங்கிய அனுஷ்டுப் சந்தம் சுலோகங்களை எளிதில் மனப்பாடம் செய்ய உதவுகிறது. இராமாயணக் கதை முழுவதும் எழுத வேண்டும் என்ற விருப்பம் இருந்த போதிலும், பாலகாண்டம், அயோத்யாகாண்டம், ஆரண்யகாண்டம் என்றவை மட்டுமே இயற்ற முடிந்தது.

ஆசான் ஆங்கிலத்தில் பல வசன நூல்களையும் காவியங்களையும் படித்து இன்புற்ருர். ஜேம்ஸ் ஆலன் என்பவர் எழுதிய 'மனிதனின் எண்ணப் போக்கு' என்ற நூல் அவருக்கு மிகவும் பிடித்திருந்தது. அதை 'மனம் போல மாங்கல்யம்' என்ற பெயரில் மொழிபெயர்த்து விவேகோதயத்தில் வெளியிட்டார். பிறகு அது 'மனச்சக்தி' என்ற பெயரிலும் வெளி வந்தது.

மனிதனே தன்னுடைய வெற்றிக்கும் தோல்விக்கும் உயர்வுக்கும் தாழ்வுக்கும் பொறுப்பாளியென்றும், அதனால் தன் முயற்சியால் எழுச்சி பெற வேண்டும் என்றும் இந்நூலில் கவிஞர் அறிவுறுத்துகிறார். எத்தனை தாழ்ந்த நிலையில் பிறந்தபோதிலும், சூழ்நிலைகள் மோசமாக இருப்பினும், மாண்புள்ள நடத்தை, மேன்மையான எண்ணங்கள், இவை வழியாக மனிதன் உயர்வை அடையலாம் என்று கூறுகிறார். ஆசானின் வாழ்க்கை அதிற் கூறிய படியே அமைந்திருந்தது. அதையே மற்றவர்களும் பின்பற்ற வேண்டும் என்பது அவர் அவா.

'ராஜயோகம்' என்பது சுவாமி விவேகானந்தர் பதஞ்சலி யோகசூத்திரத்தைப் பின்பற்றி எழுதிய புத்தகத்தின் மொழி பெயர்ப்பு. அதை 1908-ல் எழுதி ஸ்ரீ நாராயண குருசுவாமிகளுக்கு ஒரு சமர்ப்பண சுலோகத்துடன் வெளியிட்டார். இதைத் தவிர மெடோஸ் டெய்லர் என்பவரின் 'தாரா' என்ற நாவலை, 'தெய்வத்தின் பிரதீகாரம்' என்ற பெயரிலும் 'மைத்ரேயி' என்ற நூலை அதே பெயரிலும் மொழி பெயர்த்திருக்கிறார். மாணுக்கராக இருந்த போதே காளிதாஸனுடைய 'மேக தூதம்' என்ற காவியத்தை மொழி பெயர்க்க முயன்றார். ஆனால் அது பூர்த்தியாக இல்லை. பெங்களூரில் இருந்தபோது ஆதி சங்கரரின் 'ஸௌந்தர்யலஹரி', கிருஷ்ண மிச்ரரின் 'ப்ரபோத சந்திரோதயம்' ஆகிய நூல்களை ஆசான் மொழிபெயர்த்தார்.

**ஆசானின் வழிமுறை**

ஒவ்வொரு கலைஞனுக்கும் அவனுடைய பிரத்யேகமான வழியும் வேலை செய்யும் முறையும் உண்டாகும். ஒவ்வொருவரும் அவர்களுக்கு உரிய அம்முறையில் தங்கள் சிருஷ்டிகளை அழகுபடுத்தி நிறைவு அடையும்படி செய்வார்கள். சிலர் ஒரு நூல் எழுதி முடிந்தால் பிறகு அதைத் திருப்பிக்கூடப் பார்க்க மாட்டார்கள். வேறு சிலர் மீண்டும் மீண்டும் அதை மாற்றி அழகு படுத்திப் பார்ப்பார்கள். என்றும் மன நிறைவு அவர்களுக்கு இருக்காது. பெரும்பாலான கலைஞர்கள் இவ்விரு வகைக்குள்ளும் அடங்குவார்கள். ஆனால் ஒரு வேலையைத் தொடங்கும் முன்பே எந்த அளவுக்கு அதைப் பற்றிக் கவிஞன் சிந்தித்து வேலை செய்ய வேண்டிய முறையை நிர்ணயம் செய்கிறான் என்பது யாருக்கும் தெரியாத விந்தை.

ஆசான் முன் கூட்டியே சிந்திப்பதில் வல்லவர். அவருக்கு உள்ள கற்பனை மிகுதியாயினும் வெகு நாட்களுக்கு முன்பே தொடங்கும். எழுதத்தொடங்குவதற்கு முன்பே கவிதையின் முழு உருவமும் உள்ளத்தில் வடிவுபெறும். அவ்வேளையில் அவரிடம் ஒரு பரபரப்புக் காணப்படும். அவருடைய முறைகளைப்பற்றி, பானுமதி அம்மையார் கீழ்க்கண்டவாறு எழுதியிருக்கிறார் :

''ஆசான் உள்முகச் சிந்தனையாளர் என்பது நினைவில் இருப்பதற்குரியது. அவர் ஒரு கவிதை எழுதுவதற்கு முன்பு, நாள் கணக்கில் சிந்தனையில் ஆழ்ந்து விடுவார். எழுதப் போகும் புத்தகத்தைப்பற்றி நீண்ட குறிப்புகள் எழுதி வைக்கும் வழக்கம் அவருக்கு இல்லை. எல்லாம் மனதுக்குள்ளேயேதான் உருவாகும். எப்படித்தொடங்குவது, எப்படி விரிப்பது, எப்படி முடிப்பது என்று எல்லாம் முன்கூட்டியே மனத்தில் நிச்சயிக்கப்படும். முதலில் ஒரு வழி வகுத்தால் பிறகு அதை மாற்றுவது அவருக்குப் பிடிக்காது. முன்பே சரியானபப்படி சிந்தித்து பிறகு முடிவு செய்து விட்டால், அதை மாற்றவேண்டிய அவசியமே இராது என்று அவர் அடிக்கடி சொல்வார்.''

ஆசானின் கவிதைகளில் காணப்படும் கட்டுக் கோப்பும் அளவும், அவருடைய நுட்பமான வேலைத்திறனும், எல்லாம் அவர் எழுதும் முன்பு நடத்தும் ஆலோசனையின் விளைவுகள் தான். எழுதத் தொடங்கிவிட்டால் சரியான சொற்களைத் தேர்ந்து எடுத்து உபயோகிப்பதில் தான் கவனம் செலுத்துவார், அப்போது அடித்தல், திருத்தங்கள் இருக்கும். (ஒரு ஸ்லோகத்தின் கையெழுத்துப் பிரதியின் படத்தைக் காண்க.)

அவர் சாதாரணமாக ஒரு சாய்வு நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு, நோட்டுப் புத்தகத்தை வைத்துக்கொள்வதற்கு மடியில் ஒரு பலகையையும் வைத்துக் கொண்டு, எழுதுவார். இடையிடையே அவ்வறைக்குள் செய்யுட்களை மெதுவாகப் பாடியபடி அங்கு மிங்கும் உலாத்துவார். அப்போதுதான் எதுகை, மோனை, ஓசைகள் சரியாக வரும். இப்படித்தான் அவருடைய காவியங்கள் வடிவும் வண்ணமும் பெற்றன.

# 13. கருணை

ஆசான் இறுதியாக எழுதிய பெருங்கவிதை 'கருணை' என்பதாகும். அனேக ரஸிகர்கள் இதைத்தான் அவருடைய மிகச் சிறந்த கவிதை என்று சொல்கிறுர்கள். சில எழுத்தாளர்களைப் பொறுத்தவரை அவர்களுடைய சிறந்த படைப்பு எது என்று எளிதில் சொல்லி விடலாம். ஆசானின் விஷயத்தில் அது அத்தனை எளிதல்ல. சிலர் 'ஸீதை' தான் சிறந்தது என்பர். சிலர் 'நளினி'

என்பர். ஆயினும் ஒரு தேர்தல் நடத்தினல் 'கருணை'க்குத்தான் அதிகப்படியான வாக்குகள் கிடைக்கும் என்பது உறுதி.

கருணையின் கதையும் யாவரும் அறிந்ததே. வாஸவதத்தை-உபகுப்தன் இவர்களைப் பற்றிப் பல இந்திய மொழிகளிலும் கவிதைகளும் கதைகளும் எழுதப்பட்டுள்ளன. மகாகவி தாகூரின் 'அபிஸாரம்' என்ற கவிதையை எல்லாரும் அறிந்திருப்பார்கள். அவர் போதிஸத்வ கல்பலதா என்ற நூலிலிருந்து மூலக் கதையை எடுத்துக் கொண்டார் என்று தெரிகிறது. ஆசான் தமது கதையை டாக்டர் பால் காருஸ் என்ற ஆங்கிலேயர் எழுதிய 'புத்தர் சுவிசேஷம்' என்ற புத்தகத்திலிருந்து எடுத்ததாகக் குறிப்பிட்டிருக்கிறர். மூல கதை அதைத் தழுவிய போதிலும், விவரங்களில் பல மாறுதல்களும் இருக்கின்றன.

வாஸவதத்தை வட மதுரையைச் சேர்ந்த ஓரழகிய கணிகை மாது. மதுரையிலுள்ள செல்வர்கள் அவள் காலடியில் பொருளைச் சொரிந்தனர். எனினும் யாவரும் வியக்கும்படியாக அவள் மனம் உலகை உதறித் தள்ளிய புத்த சந்நியாசி உபகுப்தனின் பால் லயிக்கின்றது. அவனைக் கவர்வதற்காகத் தன்னல் இயன்றதெல்லாம் செய்தும் அவனை வெல்ல முடியவில்லை. அவளுடைய தாதி ஒருத்தியை நேராகத் தூது செல்லும்படி அனுப்பியபோதும் உபகுப்தன் அவளிடம் "உன் எஜமானியை நான் காண்பதற்குரிய வேளை இன்னும் வரவில்லை" என்று சொல்லியனுப்பிவிடுகிறுன்.

அவள் ஏமாற்றம் அடைகிறுள். அவள் விரும்பியது அவன் காதலேயன்றிப் பொருளல்லவே? மீண்டும் அவள் தன் தீய வழியிலேயே போகின்றுள். அவளுடைய புதிய காமுகன் ஒரு வெளியூர் வணிகன். அதற்கு முன்பே ஒரு தொழிலாளர் தலைவன் அவளுடைய காமுகனுக இருந்தான். இவ்விருவருக்குமிடையே அவள் பொருட்டுப் பலத்த வழக்கும் சச்சரவும் உண்டாகின்றன. அவள் வணிகனுடன் சேர்ந்துக்கொண்டு தொழிலாளர் தலைவனைக் கொன்று விடுகிறுள். இதைத் தொடர்ந்து அவள் நீதி மன்றத்தின் முன் கொலைக் குற்றம் சாட்டப்படுகிறுள். அவள் குற்றம் செய்தவள் என்று தீர்ப்புக் கூறப்படுகிறது. தண்டனையாக அவளுடைய கை, மூக்கு, செவி என்ற அவயவங்களைச் சேதித்து மயானத்தில் விடப்படுகிறுள். அவள் மரணத்தை எதிர்நோக்கியிருக்கும் வேளையில் உபகுப்தன் அவளைத் தேடி அங்கே வருகிறுன். வந்தவன் உபகுப்தன் என்று குற்றுயிராகக் கிடக்கும் அவள் அறிகிறுள். இனிமையான பேச்சினுலும் செய்கையினுலும் உபகுப்தன் அவளைத் தேற்றி அவளுடைய இதயத்திற்கு நிம்மதியளித்து, அவளுடைய ஜடரூபமான காதலைத் தெய்விகமான அன்பாக மாற்றிப் பரிபக்குவப்படுத்தி நிர்வாண நிலையை எய்த உதவுகிறுன்.

கேரள மக்கள் மிகவும் விரும்பிப் படிக்கும் கவிதை கருணை, வயல்களிலும் தொழிற்சாலைகளிலும் வேலை செய்யும்போதுகூட 'கருணை'யிலிருந்து சில பாகங்களை எடுத்துச் சொல்லி இன்புறும் ரஸிகப் பெருமக்கள் உண்டு. அத்தகைய பொதுஜன மதிப்பைப் பெறும் பாக்கள் எம்மொழியிலும் சிலவே. சுவாமி பிரம்ம வரதன் என்பவர் அதை நாடகமாக்கி வெகு நாட்களாக நடித்து வந்தார். 'கருணை' சினிமாப் படமாகவும் எடுக்கப்பட்டது. ஆனால் அது அத்தனை வெற்றியடைய வில்லை.

கவிதை சில பாமரர்களுக்குப் பிடிக்காது. பண்டிதர்களுக்கு இன்பம் அளிக்கும் வேறு சில கவிதைகள் நேர் எதிர்மாறாக அமைந்திருக்கும். ஆனால் 'கருணை' ஒருங்கே ஜனரஞ்சகமாகவும் ரஸிக ரஞ்சனியாகவும். விளங்குகிறது, ஜோஸப் முண்டசேரி போன்ற பெயர் பெற்ற விமர்சகர்கள் அதை வானளாவப் புகழ்ந்துள்ளனர். எப்படி அக்கவிதை இருசாராருக்கும் இன்பம் தருகிறது என்று ஆராய்வோம்.

முதலாவதாகக் கதை இளகிய மனதுள்ள எல்லோருடைய நெஞ்சையும் எளிதில் தொடக்கூடிய இயல்புடையது. உடலுறவு பல்வேறு நுட்பமான உணர்ச்சிகளையும் காதலின் தீவிர எழுச்சியையும் உண்டாக்கிவிடும். உடலின்பத்தைப் பணத்துக்காக விற்கும் ஒரு கணிகையைச் சுற்றிக் கதை புனையப்பட்டிருக்கும் என்றால், அக்கதைக்கு உடனே நேரடியான ஒரு மதிப்பு ஏற்படுவது இயற்கையே. மலையாள இலக்கியத்தின் மும்மூர்த்திகள் என்று அழைக்கப்படும் வள்ளத்தோல், உள்ளூர், ஆசான் ஆகிய மூவரும் கணிகையர்களைப்பற்றிய காவியங்கள் எழுதியுள்ளார்கள் என்பதை நாம் இத்தருணத்தில் உணர்ந்திருப்பது நலம். வள்ளத்தோல் மக்தலேனா மரியத்தைப் பற்றியும் உள்ளூர் பிங்களையைப் பற்றியும் காவியங்கள் எழுதியுள்ளனர்.

ஆசானை 'ஸ்நேக காயகன்' (காதற்கவிஞன்) என்று அழைப்பதுண்டு. நளினி, லீலா, துர்அவஸ்தை, சண்டாள பிக்ஷுகி என்ற கவிதைகளில் காதல், உடலுறவு ஒன்றுமேயில்லாத உன்னத நிலையிலிருந்து படிப்படியாக இறங்கி வருவதைக் கண்டோம்; ஒவ்வொரு கதையிலும் கதாநாயகி ஒவ்வொரு விதம். 'நளினி' காதல் மரத்தின் உச்சியில் இருக்கும் கிளை. நாம் 'கருணை'க்கு வரும்போதே கதாநாயகி தரை மட்டத்துக்கும் அதற்குக் கீழேயும் கூட வந்து விடுகிறாள். வாஸவதத்தை உடலுறவை விற்கும் கணிகை என்பது மட்டுமல்ல; அவள் கொலைகூடச் செய்து விடுகிறாள். இருப்பினும் அப்படிப்பட்ட பதிதையின் உள்ளத்திலும் அப்பழுக்கற்ற பிரேமைக்கு இடமுண்டு. அது உபகுப்தனைக் கண்ட மாத்திரத்தில் கொழுந்து விட்டு எரிகிறது. அவன் மட்டும் அவளிடம் கனிவு காட்டினால் அவள் தன்னையே அவன் காலடிகளில்

அர்ப்பித்துக் கொள்ளத் தயார்; விசித்திரமான இந்த உள்ளக் கிடக்கை வாசகர்களின் ஆவலைத் தூண்டி விடுகிறது. உபகுப்தனின் மனநிலை இதைக் காட்டிலும் விசித்திரமானது. இளமை ததும்பி நிற்கும் பிராயத்தில் அவனிடம் வராமல், அவள் வாடி வதங்கி வெட்டுண்டு சாகும் தருவாயில், அவளைக் காண அவன் விரைந்து ஓடுகின்றான். அப்போது தான் அவனுக்கு அவளைக் காண்பதற் குரிய வேளை வருகிறது. சாதாரண மக்களுக்கோ அது காரியம் மிஞ்சிப்போன தருணம். இந்த இகலோக வாழ்க்கையை விரும்பு கிறவர்களுக்கு அது கடந்து போன வேளை தான். ஆனால் சாவுக்குப் பின் ஒரு வாழ்வு உண்டு என்று நம்புகிறவர்களுக்கோ வேளை தவறவில்லை.

கவிஞர் தம் ஒவ்வொரு காவியத்தையும் நாடக இலக் கணத்தை மனதில் வைத்துக் கொண்டு புனைந்திருக்கிறார். எல்லா வற்றிலும் மிகுதியாக நாடகப் பண்பு அமைந்திருப்பது 'கருணை' யில் தான். ஒவ்வொரு கதா பாத்திரமும் நம்மால் மறக்க முடியாத சொற்சித்திரம். இவை தான் நாடக பாத்திரங்களாக மாறி இயங்குகின்றன, முதற்காட்சியே இதற்கு ஓர் அத்தாட்சி. நாடகப் பண்பும் வர்ணனையும் சேர்ந்து 'கருணை'யை உயர் தன்மையும் அழகும் மிக்க காலப்படைப்பாகச் செய்கின்றன.

ஒன்றிரண்டு வரிகளுக்குள்ளேயே நிலைக்களத்தைக் காட்டிய பின்னர், கவிஞர் கதாநாயகி இருக்குமிடத்தையும் அவள் வீற்றி ருக்கும் தோரணையையும் நமக்குப் படம் பிடித்துக் காட்டுகிறார்.

"மெல்ல ஒருபுறம் சாய்ந்தும், ஜரிகை மின்னும் பட்டாடை
முட்டாக்கு ஒரு வசத்தாக்கியும்,
வைரத்தோடுகள் மின்னல், போட்டியிடும் முல்லைமலரணிந்த
கருங்குழற்கற்றைகள் சற்றே காணுமாறும்,
ஜவ்வாதுப் பொட்டிட்ட சந்திர பிம்ப முககமல
மங்கையாள் வீற்றிருந்தாள்.
பளிச்சுப் பளிச்சென்று பொற்றாமரையை வெல்லும்
வலக்காலை வாழைத் தண்டென்னும் இடக்கால்
துடையிலேற்றி வைத்திருக்கையிலே,
வெட்டிவேர் விசிறியைப் பனிநீரில் முக்கித்
தாதிப் பெண் கைவளை குலுங்க வீசவே,
மலரம்பன் காமனின் ராணியாம் ரதிபோல,
மதிமோகினியாள் வீற்றிருந்தாள்."

இது ஒரு முழு உருவச்சித்திரம் என்று சொல்வது சரிதானே? மீண்டும் ஓவியம் தொடர்கிறது.

"கொண்டை முடியழகி, வாஸவதத்தையாள்,
வண்டை வெல்லும் வடிவுள்ள மலர்ச்செண்டைப்
பந்தாடும் கையினால் மெதுவாய்ச் சுழற்றவே,

தென்றற் காற்றின் எதிரொலியாற்ச் சலசலக்கும்,
பட்டில் புதைந்த ஓர் வலது காலின்
பொற்சிலம்பு மெல்லக் குலுங்கவே,
வீற்றிருந்தாள்.''

அவள் யாரையோ ஆவலுடன் எதிர் பார்க்கின்ருள், உபகுப்தனிடம் தூது சென்ற தாதி திரும்பிவந்தவுடன் கவிதை தொடங்குகிறது, பிறகு காதலிஞல் உந்தப்பட்டுத்தவிக்கும் காதலிக்கும் தாதிக்கும் இடையே ஓர் உரையாடல்.

''கட்டிளங்காளைகளாம் மாந்தர்கள் இப்படிக்
கட்டோடு வெறுப்பதோ மாதர்களை ?''

அதற்கிடையே வாஸவதத்தை தான் உபகுப்தனிடம் கொண்ட காதல் எத்தனை தூய்மையானது, கைம்மாறு கருதாதது என்றெல்லாம் தாதியிடம் விளக்குகிருள். இதற்கிடையே வணிகன் வந்து சேருகிருன். அவன் வருவது தங்கப் பூண் கட்டிய இரட்டை மாட்டு வண்டியில், அவன் வருகையைப் பற்றிய வரிகள் கவிதைக்கு மெருகு கொடுக்கின்றன, அவன் வருவது கண்டு இருப்பிடத்தை விட்டு எழுந்து போகும் தலைவியை எப்படி வர்ணிக்கிருர் பாருங்கள் :

''குளக்கரையோடடுத்து மீண்டும் திரும்பும்
அன்னப் பேடை போல நடந்து போனுள்.''

இரண்டாம் அங்கமும் முதல் அங்கத்திற்குச் சற்றும் சளைத்ததல்ல. இங்கு காண்கிற வாஸவதத்தை அழகே உருவான கணிகையல்ல. அவள் கண்டங்கண்டமாக வெட்டி முடம் செய்யப்பட்ட மாமிசப் பிண்டம். அவள் பரந்துயர்ந்த அசோக மரத்தின் நிழலில் வீற்றிருப்பதற்குப் பதிலாகத் தாழ்ந்து செறிந்து கிடந்த ஆல மரத்தினடியில் கிடத்தப்பட்டிருக்கிருள். தாதி அங்கும் அவளுக்குத் தன்னுல் இயன்ற உதவியைச் செய்து கொண்டிருக்கிருள். அவளுடைய கைகளில் இப்போது வெட்டிவேர் விசிறியில்லை. அதற்குப் பதிலாகக் காகங்களை ஓட்டுவதற்கான குச்சி தான் இருக்கிறது. முதல் அங்கத்தில் மேன்மையின் உச்சிக்கு நம்மை அழைத்துச் சென்ற கவிஞர் இப்போது தாழ்வின் அதல பாதாளத்துக்கு நம்மைக் கூட்டிப் போகிருர். முதலங்கம் நமது ஆர்வத்தைத் தூண்டிவிட இங்கு அருவருப்புடன் முகம் சுளிக்கிருேம். முதலங்கத்தின் முடிவில் வணிகனும், இங்கு உபகுப்தனும் வருகின்றனர். ஒவ்வொரு நிலையிலும் மாறுதல்களை அமைத்து அழகாக வர்ணித்துக் காட்டுகிருர். கவிஞரின் நாடக இயல்பின் நுட்பம் எவ்வளவு என்பதை நாம் ஒருவாறு உணரலாம்.

மூன்றும் அங்கத்தில் கவிஞர் சிக்கலுக்குத் தெளிவு காட்டி ஒருமைப்பாட்டை உண்டாக்குகின்ருர். வாஸவதத்தையின் மனத்தில் கணிகைக்கும் காதலிக்குமிடையே போர் நடந்திருக்கின்றது.

கணிகை தோற்று மடிகிருள். காதலி வென்று மறுமலர்ச்சி யடைகிருள், அவளுக்குள்ளே மறைந்து கிடந்த தெய்வீகம் மீண்டும் உயிர்பெறுகிறது. உபகுப்தனின் பெயரே அவளுக்கு உயிர் நல்கும் அமிர்தமாகிவிடுகிறது. மிகவும் பாடுபட்டு அவள் உபகுப்தனிடம் தன் உணர்ச்சிகளைத் தெரிவிக்க முயல்கிருள். அவளுடைய சிதைந்த அங்கங்களின் வழியாக வரும் பேச்சும் சிதைந்து தான் இருக்கிறது. எனினும் உபகுப்தன் அதை ஒருவாறு புரிந்து கொள்கிருன். வேறு யாராக இருப்பினும் அந்த இடத்தில் இரங்கி உருகி மயங்கி விழுந்துவிடுவார்கள். ஆனல் அவன் அசையாத கல், அவள் உணர்ச்சிகள் இயங்குகின்றன. ஆனல் அளவுக்கு மீறி இயங்கவில்லை. அவள் மனத்தில் உதித்த தூய காதலை உபகுப்தன் ஏற்றுக்கொள்கிருன். அவளுடைய சிக்கலான நிலைமை அவனுக்குப் புரிகின்றது. அதில் அவனுக்கு அனுதாபமும் உண்டாகிறது. அவள் செய்யக்கூடாத ஒரு பெரும் குற்றத்தை செய்தபோதிலும் அதற்காக அவன் அவளைக் கண்டனம் செய்ய வில்லை, அவளுடைய அன்பையும் ஆதரவையும் அவன் ஏற்றுக் கொள்கிருன். ஆனல் அவற்றை வேறு வழியில் லாகவமாகத் திருப்பிவிடுகிருன். அவனுடைய காதல், தூய்மையானது, பகிரங்கமானது, எங்கும் நிறைந்தது, என்றும் நிலைத்தது, உடலுறவு இல்லாதது; அதாவது "கருணை"!

அவன் சொல்கிருன். கேளுங்கள்,

"அழாதே அணங்கே! நீ அச்சம் தவிர்ப்பாய்.
அமைதி வரும், எண் பெறும் அறங்களை
அவனிக் களித்த அப்பனின் அடிகளை
அணைத்த கையினல் நான் உன் நெற்றியை வருடுவேன்."

அவன் அவளுடைய நெற்றியைத் தடவிக் கொடுத்துக் கண்ணீரைத் துடைக்கும்போது அவள் நித்திய சாந்தியின் உறைவிடத்தை அடைந்த மாதிரி உணர்கிருள். உடலை விட்டு உயிர் பிரியும் அந்தக் கண நேரத்தில் அவள் ஒரு புதிய பெண்ணுகிருள். உபகுப்தன் மிக அறிவும் ஆதரவும் உள்ளவன். எனினும் மனிதன். அவனுடைய பெருங் கருணை வாஸவதத்தையின் எரியும் சடலத்தின் மேற் சொட்டும் ஒரு துளிக் கண்ணீரிலிருந்து வெளிப்படுகிறது. அந்தக் கண்ணீர்த் துளி எப்படிப்பட்டது?

"கருணையென்னும் கடலில்
பவித்ரமாய் வளர்ந்த ஒரு
முத்தல்லவா; அவ்வொரு துளிக் கண்ணீர்?"

அவ்வொரு துளிக் கண்ணீர்தான் தூய்மையான காதலையும் கருணையையும் நன்கு வெளிப்படுத்தும் அடையாளம். கவிதையின் வாரிதி ஒரு வாக்கினல் பூத்த பூ எனலாம். 'கருணை'யில் மனத்தைப் பிளக்கும் ஓர் ஓவியச் சிறப்பை நாம் காண்கிறோம். அது

போலவே இக்கவிதையில் காணப்படும் உவமைகளும் மிக அழகா னவை. இந்நூலில் உவமைகள் ஏராளமாக உள்ளன. எல்லாம் வித விதமானவை.

வாஸவதத்தையின் கண்கள் எப்படிப்பட்டவை?

'' பிடஞ்சு மண்டி நில்க்குன்று, பிடிச்ச தூநீர் திளங்கும்
ஸ்படிகக்குப்பியில் இட்ட பரல் மீன் போலே.''

மயானத்தின் நடுவே நிற்கும் ஆலமரம் எப்படியிருக்கிறது?

'' தடியன் அரையால்; அது தலையில் தீ காளும் நெடும்
சுடலை பூதம் கணக்கே சலிச்சு நில்ப்பு.''

விதியின் விளையாட்டை யாரே அறிவார்? அதனுடைய போக்கைக் கவி தராசுத் தட்டுக்கு ஒப்பிடுகின்றார்.

'' ஹா ! சுகங்கள் வெறும் ஜாலம் ! ஆர றிவு, நியதிதன்
த்ராசு பொங்குவதும் தானே தாணு போவதும் ? ''

மோகம் எப்படி மனிதர்களை மூடர்களாக்குகின்றது ?

'' ஊட்டமாயோர் உரகத்தின் சுருளை, உறக்கத்தால்
காற்றுத் தலையணை யாயே கருது, போஷன் ! ''

[போஷன்: மடையன்; உரகத்தின் சுருள்: சுருண்டு கிடக்கும் பாம்பு]

இக்கவிதை கேரள மக்களிடையே பெரிய அளவில் வழங்கி வரும் வஞ்சிப்பாட்டு என்ற விருத்தத்தில் அமைந்திருக்கிறது. அதுவும் 'கருணை'க்கு வாசகர்களிடையே கிடைத்த வரவேற்புக்கு ஒரு காரணமாகும். அதை இசைப் பாட்டாகப் பாடும்போது கேட்போர் உள்ளத்தை அது எளிதில் கவரும். வேண்டியபடியெல்லாம் வளைந்து கொடுக்கும் இந்த நடையை ஆசான் மிகவும் திறமையாகக் கையாண்டிருக்கிறார்.

வெற்றியடையாத காதல் என்பது ஆசானுக்கு மிகவும் பிடித்தது என்று சிலர் சொல்வர். அவர் எழுதியுள்ள கவிதைகள் எல்லாம் இதற்குச் சான்று. வாஸவதத்தையின் மரணத்துக்குச் சற்று முன்புதான் உபகுப்தன் வருவது, மனிதன் ஆபத்து சந்நியாசம் வாங்கிக்கொள்வது போன்றது என்று சிலர் சொல்கிறார்கள். புதிய வாஸவதத்தை சிறிது நேரமாவது இவ்வுலகில் வாழ வேண்டாமோ? அவர்களுக்கு மூல நூலில் உபகுப்தன் வாஸவதத்தையிடம் சொல்லும் வார்த்தைகளாலேயே பதில் அளிக்க வேண்டியதுதான். "ததாகதனின் உபதேசங்களை நீ கேட்கவில்லை. உன் மனம் உலகத்தில் உழன்று கிடந்தது. கண நேரத்தில் மாயக்கூடிய உன் உடலழகு என்ற கண்கட்டு வித்தையை நீ நம்பி மோசம் போய் விட்டாய் ! ''

சிருங்காரத்தின் சுழலில் மூழ்கியிருந்த கேரளக் கவிஞர்களுக்கிடையே ஆசான் தமக்கென்று தனியே ஒரு வழியை வகுத்துக் கொண்டார். உண்மை அன்பு என்றும் நிலைத்தது. அதன் முதிர்ந்த உருவத்தை நாம் சாவுக்குப் பின்புள்ள வாழ்விலேயே

அறிவோம் என்பதுதான் அவர் நிருபிக்க முயன்ற தத்துவம். புத்தம், தர்மம், ஸங்கம் என்ற இம் மூன்றினிடமும் அடைக்கலம் புகுந்த ஒருவனுக்குத்தான் முக்தி என்பது கிடைக்கும். எத்தகைய பதிதனுக்கும் கருணையால், வாழ்க்கையின் கடைசி நிமிஷத்தில்கூட முக்தி கிடைக்கலாம்.

# 14. பிரிவு

ஆசானின் ஆற்றல் அதன் உச்சியில் இருக்கும்போது, விதியின் கொடுங் கரங்கள் அவரை நம்மிடமிருந்து குரூரமாகப் பிரித்து விட்டன. சற்றும் எதிர்பாராத விதத்தில் திடீரென்று அவருடைய மறைவு சோகம் நிறைந்த சூழ்நிலையில் நடந்துவிட்டது. ஆங்கில மகாகவி ஷெல்லியைப் போல ஆசானும் தண்ணீரில் மூழ்கி இறந்து போனார்.

*1924*-ம் வருடம் ஜனவரி மாதம் *16*ந்தேதியன்று அவர் நம்மை விட்டுப் பிரிந்தார். திருவனந்தபுரத்துக்குப் பதினைந்து மைல் வடக்கேயுள்ள தோன்னைக்கல் என்ற இடத்தில் அவருக்குச் சொந்தமாகப் பதினெட்டு ஏகரா தென்னந்தோப்பு ஒன்று உண்டு. அங்கிருந்து அன்று அவர் ஆல்வாய் நகரத்துக்குப் புறப்பட்டார். ஆல்வாய் நகரில் அவருக்குப் பங்குகள் உள்ள ஓர் ஓட்டுக் கம்பெனியின் கூட்டத்தில் கலந்து கொள்ள அவர் ஏற்பாடு செய்திருந்தார். கொல்லம் நகரிலிருந்து ஆலப்புழைக்குச் செல்லும் மாலை நேரப் படகில் அவர் புறப்பட்டார். கொல்லத்திலிருந்து புறப்படும் போதே கூட்டம் அதிகமாக இருந்த படகில் மேலும் ஒவ்வோர் இடத்திலும் ஆட்கள் ஏறிக்கொண்டே இருந்தனர். அஷ்ட முடிக் காயலின் அலைகள் நிறைந்த கரைகளைக் கடந்து படகு மெதுவாகத் திருவனந்தபுரம்—ஷோரனூர் கால்வாயில் சென்றது. படகில் அந்தியில் உறங்குவதற்கான சௌகரியங்கள் இருக்கவில்லை. அவருடைய அன்பர்கள் சிலரின் வேண்டுகோளுக்கு இணங்கி தம்மிடம் இருந்த புத்தசரிதம், கருணை இவையடங்கிய நோட்டுப் புத்தகங்களிலிருந்து கவிதைகளை வாசித்தார்.

நள்ளிரவு வந்த போது சாதாரணமாகப் பயப்பட வேண்டிய இடங்களையெல்லாம் கடந்தாகிவிட்டது. இனிச் சிறிது நேரம் உறங்கலாமென்று ஆசான் முதல் வகுப்பு அறைக்குச் சென்றார்.

அன்று சில்லென்று குளிர்ந்தபடியால் அவர் தம்முடைய கதர்க் கோட்டைக் கழற்றவில்லை. தலையில் ஒரு கம்பளியைச் சுற்றிக் கொண்டு தூங்கிவிட்டார். அந்தத் துயிலிலிருந்து அவர் எழுந் திருக்கவேயில்லை. பள்ளனு என்ற ஊரில் கால்வாய் குறுகலாக இருந்த இடத்தில் படகு கவிழ்ந்துவிட்டது. குமுறும் கடலிலும் நீந்தும் திறமையுள்ளவர் ஆசான். ஆனுல் விபத்து நடந்த இடம் குறுகிய கால்வாய். அவர் யாத்திரை செய்த படகின் பெயர் "மீட்பவன்" என்று பொருள் படைத்த "ரிடீமர்" என்பது. அதைவிட வேறு பொருத்தமில்லாத பெயர் வேறு எதற்கு இருக்க முடியும்? ஆசானின் உடல் அடுத்த நாள்தான் தண்ணீரிலிருந்து கிடைத்தது. அப்போது நெற்றியில் ஒரு பலத்த காயம் காணப் பட்டது. படகு கவிழும் போது நெற்றியில் அடிபட்டு அவர் மூர்ச்சை அடைந்திருக்க வேண்டும். அப்படியே தண்ணீருக்குள் மூழ்கிப்போனபடியால் நினைவு திரும்பி வராமலே மூச்சு முட்டி இறந்து போயிருக்க வேண்டும் என்று கருதுகின்றூர்கள்.

தன் முடிவு அடுத்திருக்கின்றது என்று ஆசானுக்கு ஒரு வேளை உள்ளுணர்வு இருந்திருக்கக்கூடும். அதற்குச் சில நாட்களுக்கு முன் கோட்டயத்தில் வசிக்கும் சங்கி என்ற நண்பருக்கு எழுதிய ஒரு கடிதத்தில், தம்மால் கோட்டயத்தில் நடைபெறவிருக்கும் இலக்கிய விழாவில் கலந்துகொள்ள முடியுமோ என்று ஐயம் தெரிவித்திருந்தார். அவர் வீட்டை விட்டுப் புறப்படு முன்பு தம் இரு குழந்தைகளின் எதிர்காலத்தைப் பற்றியும் மனைவியுடன் பேசிக்கொண்டிருந்தாராம். எல்லாவற்றுக்கும் மேலாக, பானுமதி யிடம் புறப்படுமுன்பு, "நான் போய் வருகிறேன்" என்று நெடு நாளைய வழக்கத்துக்கு மாருகச் சொல்லிக்கொண்டு போனுராம்!

இறக்கும்போது அவருக்கு வயது ஐம்பத்தொன்று. பானுமதி யம்மையாருக்கு இருபத்து மூன்றுதான். அவர்களுடைய இரண்டு குழந்தைகளுக்கும் ஐந்து வயதும் இரண்டு வயதும் நிறைந் திருந்தன. வீட்டிற்கு நாதன் இல்லாமற் போனபோது அவர் களுடைய துன்பம் எப்படிப்பட்டது என்பதை எளிதில் கற்பனை செய்துகொள்ளலாம். ஆசானின் உறவும் சுற்றமும் நட்பும் மட்டிலுமல்ல, கேரள நாட்டினர் அனைவரும் அவர் பிரிவினுல் வாடினுர்கள். அவர் இருபது ஆண்டுகள் செய்துள்ள சமூக சேவையும் பதினைந்து வருடங்களின் இலக்கியப் பணியும் கேரள மக்களுக்கு அவர் கொடுத்த கொடையாகும்.

இச்சிறு நூலில் அவர் செய்த எல்லாவிதமான சேவைகளையும் பற்றி நீண்ட முறையில் எழுத இயலாது. கவிஞர் என்ற நிலையில் கூட அவருடைய முழு உருவத்தை வரைவது கடினம். ஏனெனில் அவருடைய உள்ளம் பல கோணங்கள் உடையது. அவர் தம் மனக்கிடக்கையை எளிதில் வெளியே காட்டமாட்டார் என்பதை

நாம் அறிவோம். அவருடைய நாட்குறிப்பும் சுருக்கமாகவே இருக்கும். அவர் தன்உணர்ச்சிக்கு வசப்பட்ட நிகழ்ச்சிகள் மிகச் சிலவே.

அவருடைய அறிவும் ஆற்றலும் மிகப் பரந்தவை. அவர் ஆத்மாவைப்பற்றி அடிக்கடி பேசியபோதிலும், உடலைக் கவனிக்காமல் இருந்ததில்லை. தோட்டவேலை செய்வது அவருக்கு இன்பம் அளித்தது. உடலைப் பேணுவதற்காக அவர் தவருமல் உடற் பயிற்சிகள் செய்துவந்தார். அவருடைய உடல் 160 ராத்தல்கள் கனம் உடையதாக இருந்தது. அவருடைய உயரத்துக்கு அது கூடுதலாக இருந்ததனுல் கனத்தை எப்படியாவது குறைக்க வேண்டும் என்று அவர் முயன்ருர். அதை அவருடைய நண்பர்கள் எதிர்த்தார்கள். அதனுல் தீவிரமாக முயற்சி செய்யவில்லை. சாதாரணமாக ஆசான் புலால் உண்பதில்லை. அவர் அதை வெறுப்பவரும் அல்ல. மனைவி புலால் உண்பதைக் கைவிடத் தயார் என்று சொன்னபோதிலும் அவர் வற்புறுத்தவில்லை.

ஆசானின் நண்பர்கள் அவரை எல்லாம் தெரிந்தவர் என்றே நினைத்தார்கள். ஆனுல் அவருடைய மனைவியார், ஆசான் சில வேளைகளில் குழந்தைபோல நடந்துகொள்வார் என்று சொல்கிருர். இவ்வியல்பு எத்தனையோ பெரியவர்களுக்குப் பொதுவாக உள்ள குணம் என்று நாம் அறிவோம். அவருடைய கொள்கைகளையும் பிரச்சினைகளைத் தீர்க்க அவர் கைக்கொண்ட வழிகளையும் ஆராய்ந்தால், அவரிடம் மேலை நாட்டுப் பண்பும் கீழ்நாடுகளின் மரபும் ஒருங்கே இணைந்து நிற்பதைக் காண்போம். இம்முரண்பட்ட கோட்பாடுகளைச் சரிவர நிறுத்தி இனிமையாக இருக்கும்படி செய்தது அவருடைய வெற்றிக்கு ஒரு காரணமாக இருக்கலாம். இவ்விதத்தில் மற்ற இரு மகா கவிகளாகிய, வள்ளத்தோல் நாராயண மேனுேன், உள்ளூர் பரமேச்வர ஐயர், இவ்விருவர்களிடமிருந்து மாறுபட்டு நிற்கிருர்.

ஆசானுக்குப் புத்த மதத்தில் இருந்த ஈடுபாடு அவருடைய நூல்களால் எளிதில் விளங்கும். எனினும் அம்மதத்தில் அவர் சேரவில்லை. ஆன்மீக விஷயங்களில் பற்றுள்ளவர் என்பதனுல் அவர் அகில லோக மத சம்பிரதாயங்களைப் பற்றி விரிவாகப் படித்திருந்தார். அன்று ஈழவ சமுதாயம், ஹிந்துக்களாகத் தொடர்வதா வேண்டாமா என்று வெகு தீவிரமாக ஆலோசித்து வந்த வேளை. ஒரு கூட்டமாக ஹிந்து மதத்தை விட்டு வெளியேறவேண்டும் என்று சிலர் கூறினுர்கள். கிறிஸ்தவ, இஸ்லாமிய, பௌத்த மதங்கள் அவர்களை வரவேற்றன. எனினும் பெரும்பான்மையான ஈழவர்கள் மத மாற்றத்தை எதிர்த்தனர். இந்நிலையில் ஆசான் தெளிவுடனும் கூர்ந்த நோக்குடனும் தம் சகோதரர்களுக்கு வழிகாண்பித்தார். 1923-ம் வருடம் ஸ்ரீ நாராயண தர்ம பரி

பாலன யோகத்தின் வருடாந்தரப் பொதுக் கூட்டத்தில் நிகழ்த்திய அவருடைய தலைமையுரையிலிருந்து ஒரு பகுதி பின்வருமாறு:

"ஜாதிக் கொடுமையிலிருந்து மீள மதம் மாறினால் என்ன வென்று யோகம் அடிக்கடி சிந்தித்திருக்கிறது. இன்று பௌத்த மதம் நம்மைக் கைநீட்டி அழைக்கிறது. சமுதாயத்தில் சிறந்த தலைவரும், மிதவாதியின் பத்திராதிபரும், என் நண்பருமான ஸ்ரீ ஸி, கிருஷ்ணன் அதுதான் நல்லது என்கிறார். அவர் நம் வணக்கத்துக்குரியவராதலின் அவர் சொல்வதை நாம் கவனிக்க வேண்டும். என்னைப் பொறுத்தவரை பௌத்த மதம் எனக்குப் புதியதல்ல. அதன் தர்ம மோட்சங்களுக்கு நான் தலைசாய்க்கின் றேன். ஆனால் என் எளிய புத்திக்கு, மதம்மாறுவது உடைமாறு வது போன்ற சிறிய காரியமல்ல என்று தோன்றுகிறது. நாம் பல நூற்றாண்டுகளாகச் சிந்தித்த வழியை விட்டு மாறுவது என்பது எளிதல்ல. அப்படிச் செய்தால் நம் உள்ளங்கள் சிதறி விடும். தவிர அதனால் நன்மைகள் உண்டாகும் என்று எனக்கு நம்பிக்கையில்லை. மூன்றாவதாக, லட்சோபலட்சம் ஜனங்கள் ஒரேயடியாக மதம் மாறுவது என்பது இயலாத காரியம். அப்படிச் செய்வது மடமை. நமது சமுதாயமே மறைந்து போய்விடலாம். எல்லாவற்றுக்கும் மேலாக இம்மாதிரி விஷயங்களில் நம்மை நடத்திக்கொண்டு போவதற்கு ஸ்ரீ நாராயண குருசுவாமிகள் ஒருவரால் தான் முடியும். அவரைப் போன்ற பெரிய அறிவாளி, மத சித்தாந்த நிபுணர் நம்மிடையே இருக்கும்போது, நாம் அவர் சொல்வதைக் கேட்காமல் நம் விருப்பம்போல் மனம் அலைவது சரியல்ல."

'மதபரிவர்த்தன ரஸவாதம்' என்ற அவருடைய நூலில் மத மாற்றத்தை எதிர்த்துத் தம் கொள்கைகளைத் தர்க்க சாஸ்திர ரீதியாகவும் பகுத்தறிவுக்குத் தகுந்தபடியும் விவரித்திருக்கிறார். ஆசான் எல்லாரும் போகின்ற வழியே செல்ல விரும்பவில்லை. அவர் சுதந்திர ஆர்வம் மிக்கவர், மற்றவர்கள் புரட்சி வேண்டும் என்றபோது அவர் பதறுதீர்கள் என்றார். அதைத்தான் மத மாற்றக் காரியத்திலும் நாம் காண்கிறோம். மற்றவர்கள் தற்கால நிலைமை நீடிக்கட்டும் என்றபோது அவர் புரட்சி ஓங்குக என்று கோஷித்தார். அதைத்தான் அவருடைய காவியங்களில் காண் கிறோம். அவற்றில் சிந்தனைப் புரட்சியையும், காரியத்தில் புலி போன்ற தன்மையும் காணலாம். அவருடைய எழுத்து வன்மை படிப்படியாக வளர்ந்து வந்தது. உதிர்ந்த மலரில் அவர் பெயர் பெறுகிறார். பிறகு அது முறைப்படி வளர்கிறது. இலக்கியத்தின் லட்சியம் என்னவென்பதிலும் அதை எப்படிப் படைக்க வேண்டும் என்பதிலும் அவருக்கு திண்ணமான தீர்மானம் உண்டு. அதே தருணத்தில் அவர் மரபின் முக்கியத்துவத்தைப் பற்றியும் தெரிந்த

வர். படிப்படியான மாறுதல்களின் வழியாகவும், புரட்சியின் வழியாகவும், இருமுறைகளிலும் முற்போக்கு ஏற்படலாம் என்பது அவர் கருத்து, புரட்சியும் முறையான மாறுதலும் ஒரே சமயத்தில் நடக்கலாம் என்பதும் அவர் எண்ணம்! துரவஸ்தையில் காணும் புரட்சிகரமான திருமணம் பலருக்கும் பிடிக்கவில்லை என்பதை அவர் அறிவார். எனினும் வேண்டுமென்றே துணிந்து அவர் அதை அப்படி எழுதினர். அதே வேளையில் மதமாற்றப் பிரச்சினை வந்தபோது அவர் புரட்சிகரமான மாற்றத்தை எதிர்த்துப் படிப்படியான மாறுதலை ஆதரித்தார். புரட்சிக்குச் சரியான விளம்பரம் ஏற்பட்டால் தான் படிப்படியான முன்னேற்றம் சரிவர உண்டாகும் என்று ஒருவேளை அவர் நினைத்திருக்கக் கூடும்.

"மாற்றுவின் சட்டங்களே ஸ்வயம், அல்லெங்கில்
மாற்றும் அதுகள் ஈ நிங்களெத்தான்!"

என்று ஆசான் எழுதிய போது அவர் புரட்சிக் கவிஞர் என்பது மட்டுமல்ல, பெரும் தீர்க்கதரிசி என்பதும் தெளிவாகும். இவ்வரிகள் அவருடைய கூர்மையான நோக்கு எத்தனை தூரம் சென்றது என்பதற்கு அத்தாட்சி. இன்றைய சரித்திரத்தில் நாம் காண்பதென்ன? சட்டங்கள் அப்படியே மாற்றப்பட்டு வருகின்றன. பழையன கழிதலை எதிர்ப்பவர்கள் தாமே ஒழியும்படியான நிலை ஏற்பட்டுள்ளது. இலக்கிய வானிலும் சமூக உலகிலும் ஆசான் புரட்சியின் விதையை ஊன்றிவிட்டார். சென்ற நாற்பது ஆண்டுகளாக அவர் எழுதிய உண்மைகள் நாளுக்கு நாள் நம் கண்ணுக்கு முன் புலப்பட்டு வருகின்றன. உள்ளது உள்ளபடியே இருக்க விழைகின்றவர்கள் எத்துணை தவறு இழைக்கின்றர்கள் என்பது விளங்குகிறது.

ஆசானின் வாழ்க்கையைப் பற்றி இன்று ஆராயும் போது, அவருடைய வாழ்நாள் முழுவதும் ஒரு சோகத்தின் இழை தொடர்ந்து வருவதை உணரலாம், அவருக்கு வேண்டியது எல்லாம் கிடைத்தது, உரிய காலம் கழிந்த பிறகு தான். மரணம் ஒன்று மட்டுந்தான் வேளைக்கு முன்னதாகவே வந்து விட்டது. அவருடைய காவிய மலர் முதன் முறையாக மலர்ந்தது, அவருடைய முப்பத்தைந்தாம் வயதில். இலக்கிய வானில் அவர் ஓர் அரும் பெரும் ஒளிச்சுடர் என்று எல்லாரும் ஒப்புக்கொள்வதிலும் காலதாமதம் ஏற்பட்டது. அவருடைய திருமணம் நடந்தபோது இளமை கழிந்து விட்டது. அவருடைய இலக்கியப் படைப்புகளில் சிறந்தவையும் அவருடைய மறைவுக்குச் சற்று முன்பு தான் வெளி வந்தன. இல்லற வாழ்க்கையும் நீடித்து நிற்கவில்லை.

ஆசானின் ஒவ்வொரு பாட்டும் அபலைகளின் பாடு, துணையற்றவர்களின் கதி என்ற இரு விஷயங்களைச் சுற்றிப் படர்கிறது.

காதல் என்பது வெறும் மெய்யுணர்ச்சி மட்டுமல்ல. இரு உள்ளங்களின் சேர்க்கை என்பதை வலியுறுத்திப் பெண்களின் நிலையையும் பெருமையையும் உயர்த்திக் காட்டுகிறார். வெவ்வேறு நிலையில் உள்ள காதலர் காதலியரை ஒரே நிலைக்குக் கொண்டு வந்து காதற்கவிதையை வளப்படுத்துகிறார். இம்முயற்சியில் அவர் ஆங்கிலக் கவிஞர் ஷெல்லியைப் பின்பற்றுகிறார். மலையாளக் கவிதை இலக்கியத்தின் மறுமலர்ச்சியில் முதன்மையான பங்கு வகிப்பவர் நம் கவிஞரே.

இன்று, கேரள மக்களும் கேரள அரசினரும் இம்மாபெரும் கவிஞரின் நினைவை என்றும் நிலவும்படி செய்வதில் ஊக்கம் கொண்டுள்ளனர். அவர் பிறந்த ஊராகிய காயிக்கரையில் கடலருகே அவர் பெயரால் ஒரு மணி மண்டபம் அமைக்கப் பட்டுள்ளது. ஆண்டு தோறும் அவ்வூர்க் கடற்கரையில் மூன்று நாட்கள் நடக்கும் சொற்பொழிவுகளிலும் பொதுக் கூட்டங்களிலும் கலந்து மகிழக் கலைஞர்கள் எல்லோரும் கூடுகிறார்கள். ஆசான் தம் வாழ்வின் இறுதி மூன்றாண்டுகளில் வசித்த தோன்னைக்கல் தென்னந்தோப்பில் கேரள அரசு இன்று ஒரு நினைவு மாளிகையும் நூலகமும் நிறுவியிருக்கிறது. அங்கு ஆசான் உயிரோடிருந்த போது உபயோகித்த பொருள்களும் அவர் எழுதிய கையெழுத்துப் பிரதிகளும் காட்சியில் வைக்கப்பட்டிருக்கின்றன. அவர் படகு விபத்தில் மூழ்கிப்போன இடமாகிய பல்லனை கிராமத்தில் ஒரு நினைவுச்சின்னமும் பள்ளிக்கூடமும் உள்ளன. அந்த இடத்துக்கு, "குமார கோடி" என்று பெயரிட்டிருக்கிறது. கேரளப் பல்கலைக்கழகத்திற்கும் கேரள மாநில சட்ட சபை அங்கத்தினர்கள் விடுதிக்கும் இடையே திருவனந்தபுரம் நகரின்மையத்தில் உள்ள சதுக்கத்தில் ஆசானின் முழு வடிவச்சிலை* ஒன்றை வைப்பதற்கு ஏற்பாடுகள் நடந்து வருகின்றன.

குமாரன் ஆசானின் பெயரில் கேரள நாட்டிலும் அதற்கு வெளியிலும் எத்தனையோ சங்கங்களும் பள்ளிக்கூடங்களும் தொடங்கப்பட்டுள்ளன. சென்னை மாநகரில் நடந்து வரும் ஆசான் நினைவுப்பள்ளி அவற்றில் ஒன்று. இம்மாபெரும் கவிஞருக்கு நாம் செலுத்த வேண்டிய நன்றி இதோடு தீர்ந்து விடுமா? நாம் எவ்வளவு பெரிய நினைவுச் சின்னங்கள் நாட்டினாலும், அவருடைய நினைவை என்றும் திண்ணமாய்ப் பசுமையாய் எப்போதும் ஊக்கமளிப்பதாய் நிலை நாட்டுவன அவருடைய நூல்களே. அவை என்றும் நம்முடன் பேசும். நாம் என்றும் அவற்றிலிருந்து அறிவு பெறலாம்.

---

*1973 ஏப்ரல் மாதம் 12ந் தேதி ஆசானின் நூறும் பிறந்த நாள் விழாவன்று இவ்வுருவச்சிலை இந்திய ஜனாதிபதி ஸ்ரீ வி. வி. கிரி அவர்களால் அந்தச்சதுக்கத்தில் நிறுவப்பட்டது. அத்துடன் நூறும் பிறந்த நாள் விழா விமரிசையாகக் கொண்டாடப்பட்டது. இந்தியத் தபால் துறையினர் ஆசானின் நினைவாக ஒரு தபால் முத்திரையும் வெளியிட்டார்கள். 1973-74 ஆசானின் நூற்றாண்டு வருடமாகக் கொண்டாடப்படுகிறது.

## படிக்க வேண்டிய புத்தகங்கள்

| | |
|---|---|
| *ஸி. ஓ. கேசவன் :* | **மகாகவி குமாரன் ஆசான்.** |
| *கே. ஸுரேந்திரன் :* | **குமாரன் ஆசான்.** |
| *கே. கே. பணிக்கர் :* | **ஸ்ரீ நாராயண பரமஹம்ஸர்.** |
| *குன்னத்தூர் ஜனார்த்தன மேனோன் :* | **மகாகவி குமாரன் ஆசான்.** |
| *ஜோஸப் முண்டஸேரி :* | **ஆசான், ஒரு படனம்.**<br>**மனுஷ்ய கதானுகாயிகள்.**<br>**மாற்றொலி.** |
| *கே. எம். தானியேல்* | **வீணபூ கண் முன்பில்.** |
| *கே. எம். ஜார்ஜ்* | **முந்திரிச்சாறு.** |
| *குட்டிகிருஷ்ண மாரார்* | **ராஜாங்கணம்.** |
| *என். கோபால பிள்ளை* | **சிந்தா தீபம்.** |
| *குமாரன் ஆசான்* | **நிருபணங்கள்.** |
| *பி. கே. பாலகிருஷ்ணன்* | **காவிய கலை குமாரனுசானிலூடெ.** |

## தொகுப்புகள்

*குமாரன் ஆசானின் கிருதிகள் — மூன்று தொகுதிகள்.*

*ஆசான் ஸ்மாரக கிரந்தம்.*

*ஆசான் நினைவு மலர் (1958).*

*குமாரன் ஆசான்டே கவித (கவிதாஸமிதி)*

*ஆசான் (விமர்சனக் கட்டுரைகள்)*

*ஆசான் கவிதை (ஆசான் அகாதெமி, திருவனந்தபுரம்).*

# இந்திய இலக்கியச் சிற்பிகள்

" இந்திய மொழி பல, இலக்கியம் ஒன்றே " என்பது சாகித்திய அக்காதெமியின் லட்சியவாசகம். இதற்கு இணங்க ஒவ்வொரு மொழியிலும் தலைசிறந்த இலக்கியச் சிற்பிகளைப் பற்றி எல்லா மொழியினரும் அறிய இந்த வரிசை நூல்கள் வெளியிடப்பெறுகின்றன. அளவில் சிறியதானாலும் கருத்தாழம் நிறைந்தவை. இலக்கியச் சிற்பியின் வரலாறாகவும் அவர் படைத்த இலக்கியங்களுக்கு அறிமுகமாகவும் விளங்குபவை. முதலில் ஆங்கிலத்திலும், பின்னர் பல இந்திய மொழிகளிலும் வெளிவருபவை. தமிழில் இந்த வரிசையில் வெளிவந்துள்ள நூல்கள் :

**லட்சுமிநாத பெஸ்பருவா**

—ஹேம்பருவா தமிழ் : க. த. திருநாவுக்கரசு

ஒரிய முன்னோடி எழுத்தாளரின் வரலாறு.

**கபீர்**

—பிரபாகர் மாச்வே

தமிழ் : தி. வேங்கட கிருஷ்ணய்யங்கார்

மக்கள் கவிஞரும் ஞானியுமானவரின் வாழ்க்கையும் கவிதையும்.

**கேசவஸுதர்**

—பிரபாகர் மாச்வே  தமிழ் : ராம கோபிநாதன்

நவீன மராட்டிய இலக்கியத் தந்தையின் வாழ்க்கை.

**ஈசுவர்சந்திர வித்யாசாகர்**

—ஹிரண்மய் பானர்ஜி  தமிழ் : ராம கோபிநாதன்

வங்கத்தின் மறுமலர்ச்சித் தலைவரின் வாழ்க்கை.

**ராஜா ராம்மோகன் ராய்**

—சௌமியேந்திரநாத தாகூர்

தமிழ் : க. த. திருநாவுக்கரசு

புதிய பாரத உதயத்தின் சிந்தனைச் சிற்பியின் வரலாறு.

**பிரேம்சந்த்**

—பிரகாஷ் சந்திர குப்தா  தமிழ் : சரஸ்வதி ராமநாத்

நவீன ஹிந்தி முன்னோடி நாவலாசிரியரின் இலக்கிய வாழ்க்கை.

**ஒவ்வொரு நூலும் விலை ரூ 2·50**

சாகித்திய அக்காதெமி 1954-ஆம் ஆண்டு இந்திய அரசால் அமைக்கப்பெற்ற தேசிய இலக்கியக் கழகம். தன்னுரிமை கொண்ட இந்த ஸ்தாபனத்தின் கொள்கைகளை வகுக்கும் பொதுச்சபை, பல இந்திய மொழிகள், ராஜ்யங்கள் மற்றும் பல்கலைக் கழகங்களின் பிரதிநிதிகள் கொண்டது. இதன் முதல் தலைவர் ஸ்ரீ ஜவாஹர்லால் நேரு.

இந்திய மொழிகளில் இலக்கியப் பணிகளை ஆதரவுடன் ஒருங்கிணைப்பது; எந்த ஓர் இந்திய மொழியில் இயற்றப்பட்ட இலக்கியமும் மொழிபெயர்ப்பு வாயிலாக நாட்டின் எல்லா மொழி வாசகருக்கும் எட்டச் செய்வது — இவையே அக்காதெமியின் செயல் திட்டங்கள்.

அக்காதெமியின் வெளியீடுகள் பெரும்பாலும் இந்திய மொழிகளில் உள்ளவையே. அதன் ஆங்கில மொழி வெளியீட்டுத் திட்டம் பொதுவாக இந்திய ஆசிரியர் மற்றும் இலக்கியம் பற்றித் தகவல் தரும் நூல்களை வெளியிடுவதேயாகும்.

**சாகித்திய அக்காதெமி**
*ரவீந்திர பவன், புதுதில்லி-1*

*பிராந்திய அலுவலகங்கள் :*
**சென்னை-6, கல்கத்தா-29 & பம்பாய்-14**

